உ

சிவமயம்.

# திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ்.



இஃது

திருநெல்வேலிச்சில்லா சாத்தூர்த்தாலுகா

சிந்தப்புலி

ம-ா-ா-ஸ்ரீ வீரப்பமுதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

திருவாவடுதுறை ஆதீனம்

ஸ்ரீலஸ்ரீ நமசிவாயதேசிக சுவாமிகளிடத்திற்

கல்வி பயின்றவரும்

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவானுமாகிய

## மு. ரா. அருணசலக்கவிராயரால்

செய்யப்பெற்று

சிவகாசிக் காசுக்கடை

## ம-ா-ா-ஸ்ரீ அ. சு. வேலாயுதம்பிள்ளையவர்கள்

பொருளுதவியால்

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.



விகாரிஸு கார்த்திகைமீ"

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

## கலிவெண்பா.

சீரார் நிகமாதி செய்ய கலைஞானத்
தோரா வுணர்வரியா னோம்பொருளைப்—பாராதி
தூய குடிலையந்தஞ் சொஃறத்து வாதிபனாய்
மேயசா மிக்கருளி மேலாய—தாயபுகழ்ச்
சாமிநா தப்பெயரைச் சார்ந்தோன் றலையான
நாமவியற் கீரனரு ணற்கவிக்காச்—சேமமுற
வன்னோ னொடுபெலரை யாண்டோன் புரந்தரனை
மன்னாச் சுவர்க்கமதில் வைத்தளித்தோன்—றென்னாரு
மெய்ப்புலவர் கேட்பிக்கு மிக்ககவி மாலையணி
திப்பியமாஞ் செய்ய திணிதோளா—னொப்பில்வலிக்
கும்ப முனிவர்முதற் கோதில்குண மாணவர்க்கு
நம்பு முபதேசங்க ணல்கினோ—னும்பர்புகழ்
சர்வஞ்ஞ தாதிசுத்த சாட்குண்யன் சார்புவன
சர்வபரி பாலகன்சங் கப்புலவன்—சர்வதத்வ
வண்டங்கள் கோவைபட வக்ரரோ மத்தலையக்
கொண்ட குணவிச் சுவரூபன்—மண்டியசீர்
விச்வா திகன்விச்வ சேவியன்விச் வாந்தரியா
மிச்சான்ற நாமங்கண் மேவினோ—னச்சமர
ரின்னு முணரா வெழிலுருவக் காட்சியினை
மன்னுதவச் சூர்க்குணர்த்தி வாழ்வளித்தோ—னன்னனிடு
மண்டர் சிறையைவிடா னென்ப தறிந்துமொற்றாற்
கண்டரசர் செய்யுமுறை காட்டினேன்—பண்டதற்கா
வேந்த னிடைத்தைத்யர் மேவுவர மாதிகளை
யாய்ந்தோனா யாதவரி னாத்திமதி—யேந்துமுடி
மன்னன் செயமருமான் மாயன் செயமருமான்
றன்னுமருள் வைக்கத்தான் சொற்கத்தான்—மன்னுமண

நாறுங் குரவ னளினத்த னற்குரவன்
கூறுநய வேரகத்தான் குன்றகத்தான்—மாறினய
விச்சையறி வாகத்தா னேறுமறி வாகத்தான்
பச்சைப் பரியான் பழிப்பரியான்—மெச்சியசீர்த்
தூநூ லலையான் றொகுசீ ரலையான்மீ
மேனோக் களிப்பா விழைச்சழிப்பா—ஞானத்தன்
பாறத் தணிநையா னந்தத் தணிசையான்
கூறத் தவர்க்கணியான் கொள்சணியான்—றேறுமன
வாக்குக் கரியான் வணங்கற் கரியானன்
னோக்குக் கினியா னுதற்கினியா—னாக்கமருள்
செய்யும் பொழிற்குன்றான் சீரா ரருட்குன்றான்
மெய்ய தகளமா மேவிடினும்—வையமுயத்
துய்ய சகளவுருத் தூய்தாகக் கொண்டதற்காச்
செய்ய முகமோராறுஞ் சேர்ந்திலங்கு—கையவைக
ளீராறு மெய்தி யெழிலன்னை யின்முலைப்பா
லாரா விளையாடு மப்பண்பைப்—பாராகின்
றந்நலார் கூறுமொழி யாச்சிறுதே ரந்தத்து
மன்னுகாப் பாதிபரு வம்பத்துந்—துன்னியெழி
லோங்கி விளங்கி யுலகி னிலவுமிய
ருங்கு பரங்கிரிப் பிள்ளைத்தமிழை—யீங்குநல
முள்ள புலவரெலா முச்சிமணி யாக்கொள்ளத்
தெள்ளுமறி வாற்றேர்ந்து செப்பினான்—றள்ளவிலாக்
காற்றா ருலகெங்குங் கண்ணியத்தை நண்ணுவித்த
சேற்றூர்ச் சமஸ்தானச் சீர்ப்புலவ—னேற்றமுள
பூமகள்வத் ரப்பொலிவு புல்லுமுக வூர்வந்தோ
னாமகள் சித்ரப்பொலிவு நண்ணினோன்—சேம
வருணா சலன வடிநாளு மேத்து
மருணா சலக்கவிரா யன்.

இது-யாழ்ப்பாணத்துப் புலோலிச் சைவப்பிரகாச வித்தியாசாலைக்கு அதிபரும், சைப்பிரசார சமாசியருள் ஒருவரும் ஆகிய அரி. வேன்மயில்வாகனச்செட்டியா ரவர்கள் இயற்றியது.

---

உ

சிவமயம்.

# திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ்.

## விநாயகக்கடவுள் வணக்கம்.

திருமருவு மொருபிறை தனைச்சிவ பிரான்முடிச் செஞ்சடைக் கங்கைநதியிற், சிறுதோணி யென்னவங் கையா லியக்குபு சிறந்ததன் றிருமுகத்திற்,—பொருமருவு சேமவைப் புத்தோணி யென்னப் பொலிந்திடப் புறம்வளைந்த, புதியவெண் கோடொன்று தாங்கிவிளையாடிமகிழ் போர்க்குஞ்ச ரத்தையுள்வாங்,—கருமருவு பைம்புயலை யினமென்ன மீமிசைக் கண்டழைத் திடல்கடுப்பக், கரங்களை யுயர்த்தித் தணித்தொலி முழக்குங் களிற்றினங் களையுவந்து,—தருமருவு மலர்மாரி போலு * மலர் மாரியச் சலதரஞ் சொரிதருஞ்சீர், தகுபரங் கிரியிலருண் மிகுபரன் றருமுருகர் தண்டமிழ் தழைந்துவரவே.

## காப்புப்பருவம்.

### திருமால்.

பொன்கொண்ட செந்நிறக் கலுழனைக் காணினம் புரமனைத் துந்துடிக்கும், போர்வலி யவற்குமா தவனைச் சுமத்தலாற் போந்ததாம் போலுமென்று,—மின்கொண்ட மணிமுடி யனந்தனவ் வலிபெற விரும்பிச் சுமத்தலேபோன், மென்பாய லாகிப் பொறுக்கவதன்

---

* அலர் - நீர்.

காப்புப்பருவம்-பாட்டுடைத் தலைவரைத் திருமால் முதலியோரால் காவல்புரிவிக்கும் பருவம்.

மீத்துயின் மெய்க்கருஞ் செம்மல்காக்க,—மன்கொண்ட மனுமுறை வழக்கறிந் தரசுசெயன் மாதர்க்கு மாகுமென்ன, மன்னுமறை யாதிநூ லின்னுமுண ராமுதல்வி மணிமுடி கவித்துவைகி,—யின்கொண்ட சொல்லொடி ருந்தரசு புரிமதுரை யின்றென் குடக்கிலெவரு, மின் புறந் தென்பரங் குன்றிலங் குங்குக னெனுங்குமர குருபரனையே. (க)

சிவபெருமான்.

வேறு.

உளமு வந்தளிகள் பெடையு டன்குழுமி யுலவு பைம்பொழிலின் மெல்லிலைக் கோட்டினி, லுயரி ளங்கொடியின் மதுர மென்புனலி னூரமு றம்புவியின் மல்குநற் பூக்களு, மொளிர்ப சுங்கதிர்கொண் மரக தந்தளிர்செய் தறலி வந்ததென மெய்யினிற் பார்ப்பவ, ருரை செய் கின்றவித ழறுகு தும்பையொடு முலைவி லன்பர்மன முள்படச் சூட்டிய,—வளமி குந்தசடை யிளகு செம்பொனிற மருவு கம்பியென வைகுறக் கீற்றிள, மதிய தன்கணொரு தகடு கொண்டுநனி வளைத ரும்புதிய வெள்ளியைப் போற்கிளர், வளர்செ ழும்பவள மலையை யண்டர்பழ மறைபு கன்றுதொழு வள்ளலைப் பார்ப்பதி, மணமி சைந் துயிர்க ளவையு மின்பமுற மகிழ்ப ரஞ்சுடரை யுள்ளுறப் போற் றுது;—முளரி யங்கடவுள் பிரண வம்புகலு முறைபி றழ்ந்துசொல நில்லெனக் கேட்டுள, முனிவ ரும்பியெழ வலகி லண்டமுழு முகடு டைந்ததென விள்ளமுற் ருக்கியு, முதிர்கொ டுஞ்சினமு னொழிவ தின்றியிகன் முரண றுஞ்சிறையு ளொல்லெனப் போக்குபு, முனிவ ரும்பர்முறை யிடுதல் கண்டுசிறு முறுவல் கொண்டுயிர்க டொல் படைப் பாற்றுறு,—மளவில் வன்றிறமை யரிமு குந்தன்முத லனைவ ருந்தெரிபு நைதலுற் ருர்த்திவ, ணமையு மிந்தவித மெனிலெ திர்ந்து பிற வருள்செ யுங்கடவு ளில்லெனக் கூர்த்துண, ரறிவின் வந்தெ மையு னடிமை கொண்டருள்க வலர்க டம்பவென வுய்யவர்க் கீத் தரு, ளரசி ருந்துமகிழ் தருப ரங்கிரியு ளமர்கு கன்றனையெ மைய னைக் காக்கவே, (௨)

உமையவள்.

வேறு.

முந்தைத் தமிழ்ப்பெருஞ் சொந்தக் கவிப்பயன் றேரா வுளத்த மர் இரனைச் சாய்த்தற, மொய்ம்பற் றலைத்தடம் பைம்புட் கரத்த மிழ்ந் தேரு தழுத்திய திரனைக் கூற்றுவன், முன்புற் றமர்த்திறஞ் சிந்தச் செயிர்த்திருந் தாளா லுதைத்திடு தேவனைச் சேட்டை செய், முன்றக் கனைச்சிரம் பொன்றத் துணித்திடுங் கோபா னலத்தொரு வீரனைக் காட்டிய,—விந்தைத் திருக்கிலங் கந்தத் திறற்பெருங் காமா ரியைப்பர மேசனைப் பார்த்திகன், மிஞ்சிப் பொரப்பருங் கொங்கைக் களிற்றினம் போதா தெனச்சிறு காலனைப் போற்றிகழ், வென்றிச் சமர்த்தனந் துன்றக் கடுக்கணங் கோலா லொறுத்திய லாசையைப் பூட்டிய, விம்பச் சுவைப்பழம் பம்பச் சிவப்புறுந் தூவா யிதழ்க்கிரி மாதினைப் போற்றுதுஞ்,—சிந்தைச் செருக்குறும் பந்தப் பொறிக் குறும் பாகா தெனச்செயு மாதவப் பேற்றினர், சிந்தித் திடற்கரும் புந்திப் பலத்தருந் தேவா தியர்க்கிடை யூறெனத் தோற்றிய, சிங் கக் குலக்குணம் பொங்கப் பெருத்துவந் தேவாத மிட்டெழல் சூரரைப் போர்க்கெழு, சிந்துக் கரைத்தடஞ் செந்திற் றலத்திலங் கூர்வே லெடுத்திரு கூறுறச் சிற்றமொ,—டெந்தைக் கவிட்டிடுஞ் சந்தப் புயத் துரந் தேர்வா னவர்க்கிறை மாலறக் காத்திர, ளும்பர்க் கினிச்சுகந் தங்கற் கடுத்ததென் றுரு மகிழ்ச்சியுள் ளேமிகச் சீர்த்தவெள், ளும் பற் சுதைச்செழுஞ் செம்பொற் றொடிக்கரும் போவா துறத்தர வாசையிற் சேர்த்தற, வொன்றத் திருப்பரங் குன்றத் திருப்புவந் தேரு மணத்தருள் சாமியைக் காக்கவே. (ரு)

கற்பகவிநாயகர்.

வேறு.

புகலரிய கயமுகா சுரன்முதற் பகைவரைப் போர்வென்ற கற் பகங்கொள், பொருளினே வேண்டுவார் வேண்டுபொருண் முழு

வதும் பூசனை யுவந்தநாளு,—மிகவமுத வருளினோ கற்பக மெனும் பெயர்முன் விரவுசெம் மேனிமீது, வெண்கோடு தாங்குகார் முக முற்ற மெய்ஞ்ஞான வேழத்தை யஞ்சலிப்பாம்,—பகலவனு மதிய முங் கண்களா லொப்புமைப் படுபொருள்க ளெனினுமெந்தை, பயி லவைத் தருள்செயுந் தானத்தி னென்னையொப் பாகா வெனச்செரு க்குந்,—தகவமர் தழற்கட் பிறந்துதண் புனலிற் றவழ்ந்துபூஞ் சர வணத்திற், றங்கிவள ரும்பரங் குன்றிலுறை யுங்குகன் றனையினிது காக்கவென்றே. (ச)

### திருமகள்.

தரையிலின் னுசெய்த வரையொறுத் திடுசெலவர் தாமே யுளஞ் சமழ்ப்பத், தகுநன் னயஞ்செய்து விடுதலெனு மூதுரை தனக்கிலக் கியமதாக,—விரைகட றனைக்கடை படச்செய்த பைந்துழா யேந்த லுக் கிரவிகோடி, யெனினுமொவ் வாவொளிகொண் * மணியொடு தருந்திருவை யின்புற விறைஞ்சுகிற்பா,—முரையினிசை கேட்கின்ற வேட்கையிற் சாரிகையு மொண்கிள் ளையுந்தவன்றி, யூமரி லொடுங்கி யைந் தருவினுட் டேங்குவ துரைப்பழம் பகையொறுப்பான்,—விரை செறி நிலாமுற்ற மாதரார் சிறைவைத்தல் விழையுமென விண்ணு ளோரும், விள்ளும் பரங்கிரிக் குள்ளும் புறம்புமொளிர் வேலனைக் காக்கவென்றே. (ரு)

### கலைமகள்.

பாரினிற் படியாத முட்டாட் பெருங்கொடிய பங்கயத் தோடு சற்றும், பயிலுவது வேதாதி கலைகளுண ரெற்குப் படாதவொரு பாட்டிலொற்றைச்,—சீரினிற் சிறிதா யினுங்கற்ற பேரிடஞ் சேர் வது சிறந்ததென்றெஞ், சிந்தையர விந்தமதில் வந்தருள் சுரந்துதித் திக்கின்ற தேனைநினைவாங், — சாரினைத் தென்னவன் றளையிட்டு

* மணி - கௌத்துவமணி, இது விஷ்ணுவினுடைய மார்பிலே இலக்குமிபோல எப்பொழுதும் நீங்காதிருப்பது.

வைத்திடக் காத்தவே ளாளர்வண்மை, கருதியக் கார்பல வுருக்கொ ண்டு கைம்மாறு காற்றுதல் கடுப்பவவர்தம்,—மேரினிற் பயிலுமுழு மேதிக ளுழுங்கழனி யீரிரு புறத்தினுஞ்சூ, ழின்பரங் கிரியினின் றன்பரஞ் சலிபுவந் திடுகுகற் காக்கவென்றே. (௬)

பிரமன்.

வேறு.

தலைமைப் புலவர் மகனறிவு தந்தை யறிவென் றுரைதற்கோர், சா ன்று கச்சாக் கியர்முதலோர் தாஞ்செய் குற்றந் தருங்குணமா,—யில கக் கருணை புரியீச னென்னவ டியே மிரும்பிழைக, ளெல்லாம் பொ றுத்துப் பரங்கிரியு ளின்பந் தரும்வே ளினைப்புரக்க,—மலர்மெய்த் தவள மணிமாட மனைவிக் களித்தா ளூர்கலிச்குள், வருந்தாய் மாலுற் றிருப்பவென வசைசொலாத வகையவட்கும்,—புலனுற் றெதிர்பார்த் தவரெல்லாம் பொன்மா ளிகையீ தெனச்செம்பொற், பொருட்டாம் பூங்கோ யிலையுதவும் பொருவின் மறைசொல் புத்தேளே. (௭)

இந்திரன்.

வேறு.

* சிற்றர சிருந்துநம் மிறைவன் புரக்கும்விண் சீர்வளங் காண்டு மென்னத், திகழ்சுவைப் பாலுததி யோருருக் கொடுவந்து திருமுன்பு நிற்றல்சிவண,—வுற்றவயி ராவதத் தவ்வுததி யுட்கோ ளுணர்ந்து தன் னூர்வளங்காட், டுதல்போ லிவர்ந்துதெரு வெல்லா முலாவரு மும்பரர சைத்துதிப்பா,—நற்றவ மியற்றுமொரு நால்வரையு மொரு வரையு நாடியா லடியினிற்சேர், நறுந்தளிர் தரும்பைங் குருந்தடியி னிற்சென்று ஞானவுப தேசநல்கும்,—பெற்றமூ ரும்பரம சற்குரு வினுக்குமுன் பிரணவத் துண்மைபேசும், பெரியகுரு வாம்பரங் கிரி யமர வோங்கும் பிரானைப் புரக்கவென்றே. (௮)

* சிற்றரசு - உபேந்திரன்.

சத்தமாதர்கள்.

வேறு.

ஒருமறை யொடுமூல காகப் படைத்தவ
 ளுவைமுழு வதுமற மாளத் துடைத்தவ
ளுயர்பசு மயிலினை யூரக் கிடைத்தவ
 ளுறுகவி கொடுகலி யாழப் படைத்தவ
ளிருநில னொருகட லூடுற் றெடுத்தவ
 ளெழுவரை சிறையுர மாறப் புடைத்தவ
ளிடர்செயு மகிடனை வீடத் தகர்த்தவ
 ளிவரெழு வர்களிரு காலைத் துதிக்குதம்
பொருவினில் வெருவிய தேவர்க் கிடர்ப்படு
 புரையறு சிறுமைக டரச் செருக்கிய
புயவலி வரவர மேவத் திடத்தொடு
 பொருமசு ரர்கள்குல நூறித் தொலைத்திட
லருமையி லெனவரு போதிற் றனைத்தொழு
 தருள்பெறு மொருமுனி மாமக் களற்புட
¶ னறுவர்த வசுசெயு மாவெற் பினிற்சிவ
 னருண்மக குகமுரு சோணைப் புரக்கவே. (௬)

* முப்பத்து முக்கோடி தேவர்கள்.

வேறு.

அரனிடத்தருள் பெறுதவத்தினி லடலுறத்தின மெய்ப்பற்றெ திர்த்தாரை யீடழி சாப்பொரு, மசுரருக்கெதிர் வரமலைத்துய ரமரரு

---

¶ அறுவர் - தத்தன், நந்தி, பரிதி, பாணி, சனுமுகன், தவமாலி என்னும் பராசரரிஷி புத்திரர் இவர் திருப்பரங்குன்றத்திலே தவசு செய்திருந்த சரித்திரங் கந்தபுராணத்துட்காண்க.

(௬) சத்தமாதர்களாவார்-பிரமாணி, உருத்திராணி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, மாயேசுவரி என்க.

* முப்பத்துமுக்கோடி தேவராவார்-மருத்துவரிருவர் வசுக்களெண்மர் உருத்திரர் பதினொருவர் ஆதித்தர் பன்னிருவர் - இவர்களே தனித்தனி கோடியராய் முப்பத்து முக்கோடி தேவரெனப்படுவர்கள்.

க்கிறை யுட்பற் றுவிட்டோடி மேனில வரைப்பினி,—லுரனறப்புவி யதிலறக்கொடி யுமிழ்முலைப்பய மொக்கத் தடத்தேயவாவினி லருத் திய, வொருவரைத்தரு தலமிசைத்தனை யொளிசெய்தற்றொரு மெய்ப்பத் தியிற்றேடி மாமலர் பலப்பல,—விரவிமொய்த்தலர் வன மமைத் * தறன் மிகவரத்தனை நட்புற் றுளத்தேயு பாசனை செயச் செய, மிளிரகத்திய முனிகரக்கர கமதுகுப்புற விட்டுக் களித்தாடு மோர்துணை வனைப்பெறு,—வரமிகுத்திடு பரமலைச்சிவ மகனெனப் பொலி மெய்ச்சத் தியத்தேவை யாரொரு சிரத்தனை, மகிழ்மருத்து வர் கதிருருத்திரர் வசுவெனப்புகன் முப்பத்து முக்கோடி வானவர் புரக்கவே. (௧௦)

முதலாவது காப்புப்பருவம் முற்றிற்று.

## இரண்டாவது: செங்கீரைப்பருவம்.

பொன்னுலகி லிந்திரன் முதற்புலவ ரனைவரும் பொருவரு மகி ழ்ச்சி பூப்பப், போரசுரர் வேரறச் செய்துமுன் போற்குடி புகுந்தரசு புரியவைத்தா,— மின்னுமவர் யாரையும் விடேமென்று மேதையி னிருங்கர வினைத்தெரிந்தாங், கிவனையும் பொரமே லெழாதுள் ளிரு த்துவா மெனநீ யிருத்தல்போலப்,—பன்னுமிரு நிலனுற விரண்டு கைத் தலமும் பதித்தொரு முழந்தாளுமப், $ படிபதித் தொருமுழந்

* அறல் - நீர், இது காவிரி

$ படி உரிச்சொல்லாதலின் மிகாதுநின்றது.

செங்கீரைப்பருவம் - செவ்வியமதலைச் சொற்களைப் பேசும்பரு வம். சீர்-சொல் இருப்பருவத்தின்செயல் - ஒருகாலைமடக்கி ஒருகாலை நீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல்.

தாணிலே நிறுத்தியிரு பாலுமேலும் பார்த்தல்போற்,—றென்னுலவு திருமுக நிமிர்த்தசைத் தரிமருக செங்கீரை யாடியருளே, சிற்பரம் பொருளருளு நற்பரங் கிரிமுருக செங்கீரை யாடியருளே. (க)

உலகமா தாவன்றி யோரா று மாதாவு முள்ளங் களித்துநேரே,யுற் றுற்று நோக்கியெழில் சாலா திதற்கிதென் றெவ்வொரு விதத்தினுஞ் சீ,—ரிலகமுக மதியெனக் காணிய வுடுக்குல மெழீஇவந் திறுத்தலேய் ப்ப, விட்டவெண் ணித்திலச் சுட்டியொடு பட்டமு மிளங்கதி ரெறி க்குமணிகள்,—பலகலவு முயர்செவிப் பொற்குழையு மிளமழப் பணி கள்பிற வுந்திருத்திப், பார்ப்பவர்கள் கண்ணெச்சில் வாரா திழை த்தவொரு பரிகார மாகவணிமண்,—டிலசுநுத லழகுதர வொளிர் செழுஞ் செங்களிறு செங்கீரை யாடியருளே, சிற்பரம் பொருளருளு நற்பரங் கிரிமுருக செங்கீரை யாடியருளே. (உ)

¶ பார்த்திவந் தனிலவுண விருள்கிழித் தெழுபெரும் பரிதியென நின்னையெண்ணிப், பன்னிரு செவிக்கணும் பன்னிரு கதிர்க்கடவுள் பண்ணவர்கள் போன்றுதாமுங்,—கீர்த்திவந் தணுகாது முன்பட்ட பாடுமுயர் கேடுங் கிளக்கவுறல்போற், கிளர்செழுங் கதிர்மணிக் குழைகளொன் றோடொன்று கிட்டிக் கெழீஇமகிழ்ச்சி,—பூர்த்திவந் தன்பிற் கலந்தெனத் தொடவிரு புறத்துநின் றிருமுகத்தைப், பொற் புற வசைத்தசைத் தற்புத மிகத்தாயர் பூரித் துளங்களிப்பச்,—சீர்த் திவந் தமர்பெருந் தேவர்சே னாதிபதி செங்கீரை யாடியருளே, சிற் பரம் பொருளருளு நற்பரங் கிரிமுருக செங்கீரை யாடியருளே. (ந)

ஒங்குமறை யுள்ளுறும் பிரணவக் கனிபழுத் தொண்பொருட் செஞ்சுவைத்தா, யூற்றிருந் தூறிப் பெருக்கெழீஇ வழிதல்போ லொ ழுகுவா யூறலமுதந்,—தாங்குபொன் வரைமார்பி லுபநயன விதிமுறை சடங்குசெய் யாததானே, தங்கத் தரித்திடுந் தவளவுப வீதமிது தா

¶ பார்த்திவம் - பூமி.

னெனத் தக்கசீரோ,—டேங்குலவு மழலைமொழி குழலினிதி யாழினி தெனுங்குறட் கோரிலக்கா, வெம்பிரா னேடெம் பிராட்டியுங் கண்டு மகிழ் வெய்தியிறு மாந்திருப்பத்,—தேங்குமதி முகமிமிர்த் தொருசே யிளங்களிறு செங்கீரை யாடியருளே, சிற்பரம் பொருளருளு நற்பரங் கிரிமுருக செங்கீரை யாடியயருளே. (சு)

பொன்மய வரைக்கண் முளைத்தெழும் பச்சிளம் பொருவில் கொடி யொருமருங்கில், புலவியிற் றனதம் புயங்களி லலர்த்துமம் புயமலர்க ளும்புதுப்பொன்,—னின்மய நிறச்சிறிய வரவிந்த மொன் றரை யிதிற்பாதி யிப்பாதியி. னிற்பாதி மலர்தரத் தத்தமக் குற்றவா றினிதுபூத் திடுதலேய்ப்பத்,—தன்மய நிலைக்குஞ் செழும்பவள மலை யினிற் றன்னடிச் சுவடுதங்கத், தான்மிதித் தேறிபுட் களிகூர விளை யாடு சரவணத் திற்சனித்த,—சின்மய சொருபமூ விருமுகத் திளம தலை செங்கீரை யாடியருளே, சிற்பரம் பொருளருளு நற்பரங் கிரிமு ருக செங்கீரை யாடியருளே. (எ)

வேறு.

உரகரு மனிதரு மமரரு மன்பி னுவந்து பணிந்தாரே
 லுறுநம னுரமற வெதிர்பொரு தந்தையி னுந்தி யுதைந்தாடி
வரவதி விரைவி னெழுந்து பயின்றிட வந்த விதம்போல
 வளரொளி மணிகிளர் பொன்செயு மஞ்சிறு மஞ்ச மகிழ்ந்தேறி
விரவிய வமளி கிடந்து சதங்கை மிளிர்ந்திடு நின்றாளின்
 மெல்ல வுதைந்தமு தூறும் பெருவிரன் மென்சுவை யுண்டாடு
மரனரு ளொருமக னரிதிரு மருமக னுடுக செங்கீரை
 யறங்குறை யாத பரங்கிரி வேலவ னுடுக செங்கீரை. (அ)

விட்டி லகம்பொன் மணிப்பணி சிரமுர மென்செவி யரைகைகான்
 மீது புனைந்தவர் விட்டிடு விழிகளை மென்மணி பலபைங்கார்ப்

பட்டி லிசைந்த குறுந் § தொட ரூடு பதித்தொரு தானணியும்
பரிசென நீர்நுண் டுளிவிழி யிமைமயிர் பயில $ வரும்பி மலர்த்
தொட்டிலி னுந்தி யெழீஇமென் குரலிசை சுவைதர விளையாடுந்
தொறுமிரு புறமா மக்ளிர்கள் † பாடிய சுரரொடு தானுமவர்க்
கட்டிலி னமுதென வுண்டு களிப்பவ னுடுகெ செங்கீரை
யறங்குறை யாத பரங்கிரி வேலவ னுடுகெ செங்கீரை. (எ)

ஒளிவளர் நாமிது பணிபுரி யுந்தவ மொன்று மினுமுன்செய்
தோமிலை யெனவிண் மீனின முழுவது முள்ளழி தரவோரா
றிளிவரு மவ்விண் மீன்மட மாத ரெடுத்திரு கையுமெயு
மின்புறு மாறு தழீஇமழ விளமைக் கியல்பணி பலசெய்து
தெளிவறு மசுரர் குலங்களை யினிநீ திம்பய * மூட்டியநின்
றிருவா யினிலுயர் தருவா யமரர் செழுந்தெள் ளமுதேபோ
லளிவளர் திம்பய மூட்டி வளர்த்தவ னுடுகெ செங்கீரை
யறங்குறை யாத பரங்கிரி வேலவ னுடுகெ செங்கீரை. (அ)

நீடுபெ ரம்பரர் சூடு மணந்தனி னின்றே யன்பார
நீய கல்கென்றவ ரேவ வருந்தமிழ் நெஞ்சா ருஞ்சீல
நாடு பெருந்தவ னூடு றைகின்றந யஞ்சா ரஞ்சார
னுக நிமிர்ந்துயர் நாடு புனைந்திடு நன்கே யுந்தேசு
கூடு மருங்கல மாம குடம்புரை குன்று மென்றேறுகை
கூவு கருங்குயின் மேவு பரங்கிரி குன்று நண்பாளர்
தேடு பெரும்பொரு ளாக வெழுந்தவ செங்கோ செங்கீரை
சேவ லரும்புப தாகை பெறுங்கர செங்கோ செங்கீரை. (அ)

---

§ தொடர் - இழை.
$ அரும்பி - பிறவினை.
† பாடிய - செய்யியவென்னும் வினையெச்சம்.
* ஊட்டிய - செய்யியவென்னும் வினையெச்சம்.

கூன விளம்பிறை வேணி யரஞ்சலி கொண்டே யின்பான
 கோதி லரும்பொரு ளோதி மகிழ்ந்த குழந்தா யெந்தாய்முன்
கான வரங்களை யான சௌந்தரி கண்பா ரென்றேமென்
 காலின் விழுந்தெழு ¶ மாலின் மயங்கிய கர்தா செந்தூரின்
மான மிகுந்தெதிர் சூரனை வென்றுயர் மஞ்சா டுஞ்சோலை
 வாவி வளம்பல வாகு பரங்கிரி வந்தா யந்தாது
தேன லரம்புய பாத முறுங்குக செங்கோ செங்கீரை
 சேவ லரும்புப தாகை பெறுங்கர செங்கோ செங்கீரை. (கூ)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் உ-க்கு விருத்தம் (உ௦)

## மூன்றாவது : தாலப்பருவம்.

தம்மை யொருவா கனமாக்குந் தலைவ னெடுசெற் றரசுரிமை, தழீஇவா னுலகந் தாங்கியமா தவனுக் குடலந் தவளமற,—வெம்மை யொருவா விடத்தான்முன் வெதும்பிக் கருக விட்டதென, வெகுண்டார் கலியைத் தாக்குதல்போன் மேல்வீழ்ந் ததனுண் மிளிர்தாளஞ்,—செம்மை யொளிகான் மணிபவளந் திரைநீ ரோடு கொள்ளையிடுஞ், செயல்போன் முகர்ந்து சூறையிடல் சிவணத் திசைநான் கினும்பொழியுஞ், சும்மை முகில்சூழ் பரங்கிரிவாழ் தூயோய் தாலோ தாலேலோ, தோகை மயின்மீ தெழுந்தருள்செஞ் சுடரே தாலோ தாலேலோ. (க)

உழுவா ரொலியு நாறுசெய்வா ரொலியும் பேர்த்து நடவுசெய்வா ரொலியுங் களைகட் டெழுந்துகிமி ருழத்திமார்பாட் டொலியுமொன்றி

---

¶ மால் - ஆசை.

தாலப்பருவம் தாலாட்டுப்பருவம் - தாலாட்டு - ஓர் வகையாக நாவசைத்துப் பாடும்பாட்டு.

முழுவார் கவியி னொலியடக்கி மூரி நெடுவான் மூதண்ட
முகடு பிளக்கச் செயுங்சழனி முளைத்த செழுஞ்செம் முளரிமே[மலர்ங்
கெழுவார் பசும்பூம் பயிர்ப்பரப்பி னிடைவிட் டிடைவிட் டிடையின்
றிடல்வா சவன்மெய் விழிகளின்சீ ரெடுத்துக் காட்டும் பரங்கிரியிற்
றொழுவா ருளத்துள் வீற்றிருக்குந் தூயோய் தாலோ தாலேலோ
தோகை மயின்மீ தெழுர்தருள்செஞ் சுடரே தாலோ தாலேலோ. (உ)

விளையும் பருவ நோக்கி மள்ளர் விரும்புநீரைக் கவிழ்த்திடலு
மிகநாள் விடாம லுடன்பழகு மீன்கு ழாங்கள் வெயில்வெதுப்ப
வுளையும் பரிசு பார்த்திரங்கி யுதநீர்ப் பதுபோ லுற்பலமு
மொண்பங் கயமு மிரவுபக லூற்றுஞ் செழுந்தே னுட்பெருக
வளையுங் கதிரான் முகடுபின்னி வளச்செஞ் சாலி மழையெனச்சீர்
வளமுத் தனந்தஞ் சொரியும்வயன் மலியும் பரங்குன் றினின்மணந்து
துளையுந் தெய்வ மடப்பிடிதன் றுணைவா தாலோ தாலேலோ
தோகை மயின்மீ தெழுந்தருள்செஞ் சுடரே தாலோ தாலேலோ.(ங)

நிலவு பொழிவெண் மதியுகுக்க நிறையு மமுத நீர்த்திவலை
நிகழுங் கருவுட் புகூஉ விளைத்த நெற்கண் முழுது நெருங்கினிமை
கலவு மமுதந் துளித்ததெனக் காலு மணியுங் கமஞ்சூற்சங்
கமுஞ்செங் கரும்பும் பங்கயமுங் கான்ற கவின்செய் கதிர்த்தரளம்
பலவு முழவர் திரட்டியினம் பார்த்துச் சேர்க்கும் பழனமுயர்
பாவலோர்நால் வகைச்சொல்லும்பகுத்துத்தொகுக்கப்படுமிடம்போற்
சுலவு சீர்கொள் பரங்கிரிவாழ் தொல்லோய் தாலோ தாலேலோ
தோகை மயின்மீ தெழுந்தருள்செஞ் சுடரே தாலோ தாலேலோ. ()

நெல்லுக் கலம்பல் பலகோடி நிறைய வளக்கு நெடுங்களமர்
நீலக் கூந்தற் கடைசியர்வாய் நெருங்குஞ் சிறிய நீண்முறுவற்
பல்லுக் கலந்த வொளியவெனப் பரிந்தே யவர்சொற் பகையுமுகப்
பகையு மாமிக் கம்புயத்திற் படலெண் ணுமற் பலமணியு

மெல்லுக் கலந்த பிறமணியோ டெல்லா வளமு மேறபண்டி
யேற்றி வருமீ ரிருவீதி யிலங்கும் பரங்குன் றுமினிய
சொல்லுக் கலந்தோர் குறத்திபதந் தொழுவோய் தாலோ தாலேலோ
தோகை மயின்மீ தெழுந்தருள்செஞ் சுடரே தாலோ தாலேலோ. ()

வேறு.

உத்தம குலமென வைத்த பெருங்குடி யொருநா லுந்தழுவி
யுள்ள புறக்குடி யொருமூன் றும்பெற மூவர்பல ருங்குழுமிச்
சித்த முவந்து வினைக்கீ டாகச் செறிபய னிவையென்னச்
செங்கோ லொடும்பல புன்னில வளமுஞ் சேர வளாவிநனி
வைத்தநு தினமும் விருப்பு வெறுப்பற வந்த விருந்தோடு
வைகி யருந்த விருந்த பரங்கிரி மருவி வருந்தொண்டர்
தத்தம துளநிறை யத்தகு மமுதே தாலோ தாலேலோ
தந்தைக் குபதே சஞ்செப் பியவா தாலோ தாலேலோ. (௬)

முட்டு வராவிள மென்கன் றுமென மூரி மருப்பெருமை
முலைபொழி தீம்பால் வெள்ளத் துகள்கயன் மூழ்கி யெழீஇநெய்தற்
கிட்டுவ ராவி குதித்தஃ துவரறு சேணி யெனச்செய்பரங்
கிரிவலம் வருபவ ரரவொலி யாறிரு கேள்விக ளுறவாசைப்
பட்டு வராக முராரியொ டயனரி பண்ணவர் முதலோர்தம்
பதவியு முதவுபு தன்பத முந்தரு பரம தயாநிதியே
தட்டு வராதெமை யாளருண் முருகா தாலோ தாலேலோ
தந்தைக் குபதே சஞ்செப் பியவா தாலோ தாலேலோ. (எ)

ஆதி பரம்பர ராகிய சங்கர ராகத் தோடுகலந்
தகில சராசர நிகிலமு முதவிய வன்னை யருட்கூட
னீதி மிகுந்திடு காவலன் மகளாய் நின்ற நிலைக்கொப்ப
நீடு பரங்கிரி மேவுபு * தெய்வத நேரிழை மணமுற்றிக்

---

* தெய்வதநேரிழை-தெய்வயானை.

கோதிய லுங்குற வோரொடு வலைஞர்கள் குடியிற் ரேன்றுமவள்
கொள்கைக் கிசைய்க் குறவர்கள் பெற்றுக் கொஞ்சுங் கிளிமொழியைச்
சாதி யிழிந்ததெ ஞறு மணர்தவ தாலோ தாலேலோ
தந்தைக் குபதே சஞ்செப் பியவா தாலோ தாலேலோ. (அ)

வேறு.

அளைந்த வெண்கிரண மாஞ மீஞர் வாஞர
வலர்ந்தி லங்குபிறை போலே மேலோர் பாலேய
வளைந்த கொம்புமுக மாவா யீவாய் தேவார
மகிழ்ந்த தம்பியென வானே ரேனே ரானேரு
* மிளைந்த சிந்தையொடு நீவா வாவா காவாயென்
றிறைஞ்சி நின்றவது கூலா வேலா மாலாசை
தளைந்த வம்பர்வினை தீராய் தாலோ தாலேலோ
தரும்ப ரங்கிரியை யூராய் தாலோ தாலேலோ. (கூ)

அரும்ப லங்கொடுவி தாரா தாலோ தாலேலோ
அரும்ப லங்கொடுவி தாரா தாலோ தாலேலோ
கரும்பு யங்கமொழி வாகா தாலோ தாலேலோ
கரும்பு யங்கமொழி வாகா தாலோ தாலேலோ
இரும்ப ரம்பொருவை வேலாய் தாலோ தாலேலோ
இரும்ப ரம்பொருவை வேலாய் தாலோ தாலேலோ
தரும்ப ரங்கிரியை யூராய் தாலோ தாலேலோ
தரும்ப ரங்கிரியை யூராய் தாலோ தாலேலோ. (க0)

(இ-ள்.) அரும்-அரிய, பலம்-(தன்னைவந்து வணங்குந் தொண்டர்களுக்குப்) பிரயோசனத்தை, கொடு-அருளுகின்ற, விதாரா-கொடையை யுடையவனே! அரும்பு-உண்டாகின்ற, அலம்-அமைவினை (அடக்கத்தை), கொள்-கொண்ட,

* இளைந்த - விகாரம்.

துவிதாரா-(தெய்வயானை வள்ளியம்மை யென்னும்) இரண்டு மனைகவிளையுடையவனே! கரும்பு-கரும்பானது, உயங்கு-வாடுகின்ற, அ மொழிவாகா-அந்த வார்த்தையின் அழகை யுடையவனே! கரும்புயங்கம்-கரிய பாம்புகளை, ஒழி-கெடுக்கின்ற, வாகா-(மயில்) வாகனத்தை யுடையவனே! இரு-பெருமை, பரம்பு-நிறைந்த, ஒரு-ஒப்பற்ற, வைவேலாய்-கூரிய வேலாயுதத்தை யுடையவனே! இரும்பு அரம் பொரு-இரும்பினாலாகிய அரத்தையொத்த, வைவு-நிந்தையை, ஏலாய்-பொருந்ாதவனே! தரு-கற்பகவிருக்ஷத்தினுள்ள, உம்பர்-தேவர்களது, அம்-அழகிய, கிரியை-செய்கைகளை, ஊராய்-செலுத்துதலை யுடையவனே! தரும்-(நினைத்தவற்றைக்) கொடுக்கும், பரங்கிரி-திருப்பரங்குன்றமாகிய, ஐ ஊராய்-அழகிய நகரத்தையுடையவனே!

குறிப்பு:—கரும்புயங்கம் பெரியபாம்புகள் எனலுமாம். இரும்பரம் பொருவைவேலாய் என்னும் இரண்டடிகட்கும் நிரலே பெருமையாகிய உண்மையை விரோதிக்கின்ற நிந்தையைப் பொருந்தாதவனே-இரும்பினாலாகிய அரத்தை யொத்தகூரிய வேலாயுதத்தை யுடையவனே யென்றலு மொன்று.

தாலப்பருவ முற்றிற்று.

ஆகப்பருவம் ௩-க்கு விருத்தம் (௩0)

---

## நான்காவது: சப்பாணிப்பருவம்.

பொங்கழன் முளைத்தெழு கொழுந்தெனுஞ் செஞ்சடைப் புங்கவன் றிருமுகத்திற், பொலிநுதற் கட்பிறந் தொளிருமோ ராறுசிறு

---

சப்பாணிப்பருவம்-இருகரங்களையுஞ் ஒருங்குசேர்த்துக் கொட்டும் பருவம்.

பொறிகளா யறிவின்மிக்கோ,—ரங்கரிய தங்கிளைஞர் கட்பினர் மெலிந் துவிடி லன்புடன் ருங்குவதுபோ, லனலிறையு மவனண்ப னுஞ்சுமந் தேபின்ன ரங்கங்கை யாற்றில்விடவக்,—கங்கைதன் மைந்தனு மென் றுதன் னியலபினைக் காட்டாது பாதுகாத்துக், கணப்பொழு தினித் சரவணப்பொய்கையுள்விடக்*கங்களி நழுன் றுகொண்டு,—தங்கருள் விளைந்திட வளர்ந்திடுங் கற்பகஞ் சப்பாணி கொட்டியருளே, தமிழ் வளந் தருபரங் கிரிவருங் குருபரன் சப்பாணி கொட்டியருளே. (க)

உருவுகண் டெள்ளாமை வேண்டுமென் பதனுண்மை யுலவைய னல் கங்கைகாண, வொளிர்சிறு புலிங்கங்க ளாகியங் கங்கவர்த முறு வலி யொடுக்கிவருதான்,—மருவுசம யந்தனை வளர்க்கின்ற தாயர்தன் மந்திர வெழுத்தளன்பர், மனமெனுந் தனதிருப் பாரு வதற்கொப்ப வதனமா றுகமுடிவி,—லொருவுமச் சமயங்க ளொன்று வதற்கொப்ப வொருதனு வெடுத்துநாளு, மூற்றிருந் திளநகு வொழுகம் புயாசனத் துவகையொ டுறைந்ததேவே,—தருவுநிகர் தருகரஞ்சேந்தொளி ததும் பிடச் சப்பாணி கொட்டியருளே, தமிழ்வளந் தருபரங் கிரிவருங் குரு பரன் சப்பாணி கொட்டியருளே. (உ)

மகவாகி யொருதாய் வயிற்றினில் வயாவுற்று வாராத தந்தையெ ன்ன, வந்தன்ப ரிதயதா மரைபோ லிலங்குசர வணமலரும் வனசமல ரிற்,—றகவாயிருந்திவன் றுயிலாப் பிள்ளையென றவிரமாலாதிபுலவர் தருமேவ லால்வந் தழைக்குமூ விருமாதர் தங்கரத் தாறுமகவாய்ப்,— புகவாசையோடுச்சி மோந்துமுத் தங்கொண்டு பொற்புறவணைத்தணை த்துப், பொன்வள்ள முலையிற் சுரந்தூறு தீம்பால் புகட்டத் தெவிட் டவுண்டு,—சகவாணர் கொண்டாட வளரிளஞ் செம்பரிதி சப்பாணி கொட்டியருளே, தமிழ்வளந் தருபரங் கிரிவருங் குருபரன் சப்பாணி கொட்டியருளே. (ங)

---

* கம்-தலை.

மாதா வொருத்திக்கு மூவிருவ ரன்புள மடுத்துத் ததம்பிமேன் மேல், வழிதல்போன் மருமவள் ளம்பொழியு மின்னமுத மாந்தியிறு மா க்குநின்னைச்,— சேதாங்க மலமலர்கள் சரவணப் பொய்கையிற் சேர ச் சுமந்துநிற்றல், செழுநீ ரிடைக்கைவிடு வழுமா நிடக்கனற் றேவே று பலவுருக்கொண்,—டாதார மாய்வந்து தாங்குத னிகர்ப்பமே லங் தென்ற லங்குலாவ, லவ்வழுத் தீர்வான் மருத்திறையும் விசிறிவினை யருவா யியற்றன்மானத்,—தாதா வெனப்புலவர் சூழவதி யுங்குமர சப் பாணி கொட்டியருளே, தமிழ்வளந் தருபரங் கிரிவருங் குருபரன் சப் பாணி கொட்டியருளே. (ச)

அதுவிது வெனச்சுட்டு தற்கடங் காததா யாதிநடு வந்தமாகி, ய ணுவாகி மேருவா யருவாகி யுருவாகி யருவமுட னுருவமாகி,—முதும றையின் முடிவாகி யொன்று யனந்தமாய் முன்னைப் பழம்பொருட்கு, மூலமாய் மோனமெய்ஞ் ஞானமா யன்பர்பெறு முத்திக்கு வித்துமாய் மற்,— றெதுவெனினு மதுவாகி யிவையெலா மல்லவா யென்று மொரு தன்மையாகி, யெல்லா வுயிர்க்குமோ ருயிரா யிருக்குநீ யினி யவே லேந்துகையாற்,—சதுமுகன் பணியும் பரங்கிரிக் குமரவேள் சப்பாணி கொட்டியருளே, தமிழ்வளந் தருபரங் கிரிவருங் குருபரன் சப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

சங்கை யிளங்களி யனமின மென்று தழீஇநா ணுட்கொள்ளுந்
  தடத்தி லிலங்கு பொகுட்டு ளெழுந்தமர் தரமலர் தருசெய்ய
பங்கய மலர்போ லுங்குற மகளிர் பரிந்து வளர்த்துநிதம்
  பாகே தேனே யமுதே யென்று பகர்ந்துட் களிகூரு
மங்கை யிளம்பரு வங்கவி னுறவிரு மார்பிற் பெரிதாகி
  மலியுங் களபங் கமழும் புழுகு வனைந்து நிமிர்ந்துவளர்
கொங்கை யடங்கிய வங்கை சிவப்பக் கொட்டுக சப்பாணி
  குமர பரங்கிரி யமர பரம்பர கொட்டுக சப்பாணி. (சு)

ஒருத்தி பெறுஞ்சிறு மைந்தர்க ளுட்பயி லுவகை மிகக்குழுமி
யுற்றுச் சிலபக லொழிய வழுக்கா றுடனுட் பகைகொண்டே
யருத்தி யறும்படி யொருவரை யொருவ ரடித்திடல் சிறுபான்மை
யாகிய வுலகிய லதனுக் கொருகரி யாமென வமரர்தமைத்
திருத்தி மகிழ்ந்தவர் சேனா பதியாந் தெய்வத் திறமிகுநின்
றிருமே னியிலிரு புறமுந் தமையே சிவண முளைத்திடுசெங்
குருத்திக ழுங்கர மலர்கள் பொருத்திக் கொட்டுக சப்பாணி
குமர பரங்கிரி யமர பரம்பர கொட்டுக சப்பாணி. (எ)

மன்றன் மலர்க்குழன் மகளிரை யாடவர் வந்தனை செயல்பாரில்
வழுவா மெனினும் புலவியி லவரை வணங்கல் வழூஉவமைதி
யென்றறி ஞர்க்கு ளியம்பிக் கொளவர னேயா தியதேவ
ரெவருஞ் சாமி யெனும்பெயர் தனியே யேலா விதநிற்கே
யொன்ற வுரைத்திடு குறிகா ரணமெனு மொண்பெயர் நிலைநிறுவற்
குறுநீ யொருசிறு குறமா திருபத மூடலி னுட்டொழுநின்
குன்றவின் மெய்ச்சீர் துன்று கரங்கொடு கொட்டுக சப்பாணி
குமர பரங்கிரி யமர பரம்பர கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

வரம்பறு † மாவி தருங்கய மொய்த்த மலர்ப்போதுள்
வயங்கிய தேவு நகுந்திரு வைத்த நிறத்தானு
நிரம்பிய வான வருந்தொழு கற்ப நிழற்கோவு
நிதம்பிரி யாம லிருந்த வருத்த மறப்பாரி
னுரம்பயி லேவ ரருந்தவ முற்றி னுமெட்டாம
லுறுஞ்செய லேசெய் பெருந்திற லுற்ற கனற்கோவிற்
பரம்பர ரீய வருங்குக கொட்டு கசப்பாணி
பரங்கிரி மேவு மிளங்கதிர் கொட்டு கசப்பாணி. (கூ)

† ஆவி-வாசனை.

விசும்பினி லேறு சலம்புனே சித்தர் தவப்பேறே
விளங்கிய யாவு நிறைந்திடு மத்து விதச்சீரே
யசும்புற ஆறு செழும்பிர சத்தி னருட்காவே
யடங்கலர் வீறு மறந்தணி வித்த திறற்கோவே
வசுந்தரை மீது மகந்தழை யச்செய் மறைத்தேவே
வணங்கிய தேவர் சிரந்தொறு முற்ற மணப்பூவே
பசுந்தமிழ் கூறு பரம்பொருள் கொட்டு கசப்பாணி
பரங்கிரி மேவு மிளங்கதிர் கொட்டு கசப்பாணி. (க0)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ச-க்கு விருத்தம் (ச0)

## ஐந்தாவது: முத்தப்பருவம்.

தனிவந் திருத்தல் பொருள்போலச் சகல வுலகு மீன்றவொரு
தாயா முமைதன் கேள்வரொடு தடாகந் தனின்மார்ச் சாலமுறை
யினிவந் திருக்கு மேறேறி யெழீஇவந் தருவா றினையுமெடுத்[சியன்பு
தெடுத்தோ ருருவாச் செயக்கந்த னெனும்பேர் பெற்றோ யிறைஞ்
கனிவந் தினைத்தென் பார்க்கருளுங் காரூர் பரங்குன் றூர்வாழுங்
கடம்பா வடவேங் கடவாமெய் கமழுஞ் சைவா கமம்பொதிகை
முனிவன் றனக்கு மொழியுநின்வாய் முத்தந் தருக முத்தமே
முகுந்தன் றகுந்த மருகனெனு முருகா முத்தந் தருகவே. (க)

தொழுது வணக்குந் தலைவானோர் சூழும் பொய்கைத் துறையினுனைத்
துன்றி யெடுத்து மடியிருத்திச் சுரக்கு முலைச்செஞ் சுவையமுதம்
பழுது விலக்குந் திருவுளத்தாற் பசியோ ராது பராமுகமாப் [ணத்
பயிலு நினைவற் புறுத்தியுண்ணப் பண்ண வோபொற் பசுங்கிண்

முத்தப்பருவம்-முத்தங்கொள்ளும்பருவம்.

தழுது வரிவண் டுழக்குகுழ லுமையா மொருதாய் கரத்தூட்ட
வுண்ட புதல்வர் திருப்பரங்குன் றுறையு முதல்வா வுவ்வமுத
மூழுது மணக்குஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகுந்தன் றகுந்த மருகனெனு முருகா முத்தந் தருகவே. (௨)

அதிரார் கலியி னரவொலிவிண் ணளவும் பரங்குன் றமர்வாவி
யனைய மேருச் சாரன்மடு வடைந்து வானோ ரங்கம்விதிர்
விதிரா நின்றே தகுவர்செயல் விளம்பி யெமைக்கை விடேலென்று
வேண்டித் துதிக்குந்துதிக்கருள்செய்மிகுந்தமகிழ்ச்சிவிளைவுமுன்னு
ளெதிரா ரெனக்கென் றுந்தையினை யிகழ்ந்த பாவி யெனுந்தக்க
னியாகந் தனக்கொத் திருந்தவிவ ரிகழ்ச்சி விளைவு மெதிர்தோன்ற
முதிரா முறுவ லரும்புநின்வாய் முத்தந் தருக முத்தமே
முகுந்தன் றகுந்த மருகனெனு முருகா முத்தந் தருகவே. (௩)

வற்று தூறி வான்சுரபி வழங்கும் பாலும் வடித்தெடுத்த
வானோ ரமுதுங் சற்பகப்பூ மலர்ச்செந் தேனு மாமதுரம்
பற்று தெனமுக் கனிரசமும் பலவாங் கருப்பம் பாலுமணப்
பாகுங் கலந்து குழைத்துமிகப் பருவஞ் செய்யப் பட்டாலுஞ்
சற்று யினுமொவ் வாதெனினுஞ் சங்கப் புலமைத் தலைவாநீ
தங்கும் பரங்குன் றெங்குமன்பர் தாம்பா டுஞ்செந் தமிழ்நிகரு
முற்று மழலை மொழியுநின்வாய் முத்தந் தருக முத்தமே
முகுந்தன் றகுந்த மருகனெனு முருகா முத்தந் தருகவே. (௪)

ஆவா தந்தை வேடுருக்கொண் டதனு லோநீ வேடரக
மாகு மலையிற் றங்கவினோ வமுதே யருந்தி யதனுருவாந்
தேவா தியரால் வளர்த்துதவுந் தெய்வ யானை திருமணஞ்செய்
சிலம்பா வவள்வா யிதழமுதந் தினமுங் கொடுக்கத் தேடியுனை
வாவா வாவென் றழைத்தாலும் வாரா தோடி வனவேடர்
மடமான் வாக்கிற் கலந்திரந்து வணங்கி மருவி மலரிதழ்த்தேன்

மூவா வமுதென் றருந்துநின்வாய் முத்தந் தருக முத்தமே
முதுந்தன் றகுந்த மருகனென்னு முருகா முத்தந் தருகவே. (௫)

வேறு.

உன்னிடிற் செய்யுமெல் லாம்வல்ல சித்தனென் றுந்தைதனை யுலகமெல்லா, மோதுஞ்சொன் மெய்ம்மையன் றுபசார மேயென்ன வும்பரார் குழுமியுறுகண்,—டன்னிடத் திற்சொல்ல வவையுளொரு சிறிதுந் தவிர்க்கமுடி யாதவந்தத், தனிமுதலு நனியுவகை கொள்ளக் கடுஞ்சமர்த் தகுவரைச் சத்திவேலாற்,—சென்னியைக் கொய்து கொய் தோங்குங் கரும்பனந் திரள்கா யெனக்குவித்துத், திருவருள் சுரந்துவா னுடுகுடி யேற்றியத் தேவரிடர் போக்கியனையார்,—பன்னியர்க் கபயமொடு மங்கலந் தந்தநின் பனிவாயின் முத்தமருளே, பரி திரு மும்பரங் கிரியில்வா ழுங்குகன் பனிவாயின் முத்தமருளே. (௬)

தந்தையிலி தாயிலி பிறப்பிலி யிறப்பிலி சமானமிலி யென்றுநித முஞ், சகலவே தாகம புராணங்கண் முறையிடத் தானே தனித்த தனியாய்,—முந்தைநான் முகனுதி முத்தேவர் முத்தொழிலின் முதன் முறை தொடங்குநாளின், முன்புறு மகாதிநா ளுள்ளதா யருளுருவ முழுமுதற் கடவுளாநீ,—சிந்தைகளி கூரவான் செய்தவப் பேற்றி னோர் சிற்றிளங் குழவியாய, செய்கைக் கிணங்கவுமை யம்மையினு மோரறுவர் சேர்த்தாய ராகவவர்தம்,—பந்தைநிகர் முலைபால் சுரந்திடச் சுவைகொணின் பனிவாயின் முத்தமருளே, பரிதிரு மும்பரங் கிரி யில்வா ழுங்குகன் பனிவாயின் முத்தமருளே. (௭)

* சலந்தருபல் வகையான முத்தமொடு $ தரைதரத் தக்கவத் தகை யமுத்தஞ், சகலமும் புரைபடுங் கட்டிவைக் கப்படுந் தனிகர்தலை

---

* சலந்தரு பல்வகையான முத்தம் - சலசம். $ தரைதருபல்வகையான முத்தம்-தலசம். எனவே, எல்லா முத்தங்களும் இவ்விரு வகை முத்தங்களுள் ளடங்கியவாறுகாண்க.

வாயிரேறும்,—கலந்தருகி யொளியறத் தூங்கிநிற் கப்படுங் களமுறுங் காசையீந்து, கைவிட்டு நீங்கிடும் பேதையர்க ளேமிகக் கருதப்படுங்கணக்கா,—லலந்தரு கிறைஞ்சிநிற் கின்றமெய் யடியவர்க் கருள்சுரக் குங்கடைக்க, ணன்னையே தந்தையே யவையுளோன் ருயினும் மற்பமு மவாவுகில்லேம்,—பலந்தரு மறைச்சுமுதன் மந்திரந் தோன்றுநின் பனிவாயின் முத்தமருளே, பரிதிசூ ழும்பரங் கிரியில்வா ழுங்குகன் பனிவாயின் முத்தமருளே. (அ)

வேறு.

அண்டர்வி டங்தொட நின்றல றும்பொழு தத்தரு குற்றினிநீ
 ரஞ்சலி ரென்றப யந்தர வங்கண டுத்தத னைச்சிறிதா
வுண்டசி வன்றனொ டென்றனை யென்றுமு ளொத்ததி றற்புலவோ
 னுங்கென வன்பரு ணர்ந்திட வன்றக முற்றபொ ருட்கொருநீ
கண்டறி யும்பொரு ளெங்குமு யர்ந்துக லப்பவு ரைத்தெதிரே
 கம்பமு றுங்கல கம்புரி யுங்கவி கட்கும கிழ்ச்சிசெய்வோய்
முண்டக மங்களி கொண்டல ருஞ்சிறு முத்தம ளித்தருளே
 முந்துப ரங்கிரி வந்தரு ளுங்குக முத்தம ளித்தருளே. (கூ)

மன்றின டம்புரி யுஞ்சிவ சம்புவ ணக்கம தற்கொருமா
 மந்திர மும்பொரு ளுந்தரு நின்கைவ ணக்கம தற்கெழிலார்
குன்றிலெ ழுங்குற வஞ்சியி னஞ்சிறு கொப்பிலு டைத்திழிதேன்
 கொண்டுபி ழிந்துக லந்துபி சைந்துகொ டுத்தவ ளத்தினைமா
மென்றித ருஞ்சுவை யென்றுள ருந்திய வித்தக தத்தலைபாய்
 வெண்டர ளம்பொழி சங்கின மெங்கணு மிக்குல விப்பயில்சீர்
முன்றிலி லங்கிய செந்தில மர்ந்தவ முத்தம ளித்தருளே
 முந்துப ரங்கிரி வந்தரு ளுங்குக முத்தம ளித்தருளே. (கo)

முத்தப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் டு-க்கு விருத்தம் (டுo)

---

## ஆறுவது: வாரானைப்பருவம்.



விரித்தவன சப்பா சடைப்பரப் பெங்கணும் வெண்சங் கினந்தி வழ்ந்து, மென்கரு வுயிர்த்தீனு முத்தமுந் திரையெறியு மிளிருநண் ளேியும்வேறு,—பிரித்தறிய முடியா திலங்கவிடை யிடையனப் பேடு தவு பீடுபெறும்வெண், பேரண்ட மும்பொலிதல் காரண்ட மிசை சிறிது பெரிதா முடுக்கணங்கள்,—சிரித்தலர்த லொப்பவித னூடுமு திர் சூலுதிர்த் திடுமிடந் தேடிமெல்லத், திகழ்சங்க மொன்றூர்த லவ் வானி னொளிர்நிலவு செல்லுத னிகர்க்கும்வாவி,—வரித்தமர வண்டு கண் முழங்கும் பரங்கிரியின் வள்ளிகண வன்வருகவே, வஞ்சவுரு நீடு கிர வுஞ்சகிரி யூடுருவு வடிவேல வன்வருகவே. (க)

அருகுவரு சேவலெகி னம்பவள வாயமு தருத்தித் திருத்தியன் பா, லணைத்தணைத் துத்துனி யகற்றிஞ லும்முனி வரும்பியகல் பெட் டையன்னங்,—குருகுவிளை யாடலிற் பேடைகண் சாடையிற் கூடுங் குறிப்புணர்ந்து, குரூஉச்சிறை விரித்துத் தழீஇநலந் துய்த்துமகிழ் கூர்தல்கண் டெட்கொதித்துப்,—பெருகுமயல் சற்றும் பொறுமையிற் றன்சேவல் பின்சென்று வலியவந்து, பெட்பினுர் கட்கேது வெட்க மென் றிடமரூஉம் பெய்புனற் பொய்கைசூழ,—வருகுவடு முடிவா னளாவும் பரங்கிரியின் மஞ்ஞைஞுவா கனன்வருகவே, வஞ்சவுரு நீடுகிர வுஞ்சகிரி யூடுருவு வடிவேல வன்வருகவே. (உ)

குட்டிமுன் பிரமனைச் சிறையிட்ட நின்னைக் குறித்தவன் றேவி யனையான், குற்றமா றிப்பண்டு போலிருக் கப்பல கொழுந்தழற் குண் டநடுவெட்,—கிட்டியுரு வொன்றுபோ தாதென வனந்தங் கிடைத்துக் கிளர்ந்துசரியை, கிரியைமுழு வதுமொருவி யோகத் திருத்தல்போற் கிஞ்சுகக் கேழ்கனிந்த,—நெட்டித ழலர்ந்தெழுங் கமலமேல் வெள்ள

---

வாரானைப்பருவம்-வருதலைவிரும்பியபருவம். வாரானை-வருதல்.

ன்ன நிரைநிரை குலாவிநிற்கு, நீடேர வணமெனக் கூடேபல திர்த்தநீர் நேடிவந் தாடிநேரே,—மட்டிலா வடியவர் வணங்கும் பரங்கிரியுள் வளரிளஞ் சேய்வருகவே, வஞ்சவுரு நீடுகிர வுஞ்சகிரி யூடுருவு வடி வேல வன்வருகவே. (௬)

தடித்துப் பருத்துக் கொழுத்தவிள வாளைமீன் சமர்புரிந் தொன் றொடொன்று, தாவிக் குதித்துவிண் டருமருவு தேன்செழுந் தட்டி னூ டுருவியப்பாற்,—றுடித்துக் களித்தேக வொருபெருந் துளையி ட்ட திருவசக் கரநிகர்ப்பத், தோன்றுமிச் செய்யதேன் றட்டினூ டிழி யுமது தும்பிபல தொண்டைதூக்கிப்,—பிடித்துக் களித்துக் குடித்து ருசி பார்த்திளம் பிடிகட்கு முன்னருத்திப், பிறைமருப் பிறையுமுளை யாதமென் கன்றினைப் பின்னுணப் பெரிதுவந்து,—வடித்துக் கொடு த்திடுந் தென்பரங் குன்றிலுறை மழவிளங் குகன்வருகவே, வஞ்சவுரு நீடுகிர வுஞ்சகிரி யூடுருவு வடிவேல வன்வருகவே. (௭)

குளங்களுட் புனலாடி வருமிள மடந்தையர் குழாமுங் குறிஞ்சி யின்கட், குறவர்கள் விளைத்தசெந் தினையிளங் கதிருண்டு கொள்ளு நீர் வேட்கைமிகவு,—ழுளங்கருதி வந்துபரு கிச்செலுங் கரிகளு மொ ருங்கே யளாவிநாளு முயர்கரைச் சூழலி னுலாவருத லுலகெலா முய் யுமொண் மாரிபெய்தற்,—கிளங்கதி ரெறிக்கின்ற மின்னல்க ளுடன் கூடி யெழிலிபல வாரிநீருண், டேழிவந்து வாரிசூழ் தோற்றமொப் பாமென்ன வெதிர்கண்ட பேரியம்பும்,—வளங்களிசை யும்பரங் கிரி யிலுயர் தீபமெனு மாணிக்க மணிவருகவே, வஞ்சவுரு நீடுகிர வுஞ் சகிரி யூடுருவு வடிவேல வன்வருகவே. (௮)

வேறு.

மேவுந் தனதுச் சியின்வடபால் விரும்பித் தோய்வார் வின்ளுமுரை
மெய்யே யாகும் படிபுரிந்து மிளிர் * சத் தியகூ வமுமேல்பால்

* சத்தியகூவம் - அரிச்சந்திர மகாராஜன் தன்னிடத்து மூழ்கு தலாற் சத்தியவிரதந் தவறுதிருச்கும்படிசெய்த ஓர் தீர்த்தம்.

வாவுந் திரைநீர் மூழ்கியெழு வார்க்கு மேலா மகப்பேறு
வழங்கு மரிய $ புத்திரகூ வமுமெம் § பரமன் வடிவாகப்
பாவுஞ் சீர்பெற் றிருக்கின்ற பண்பிற் கேற்பக் கங்கையெனப்
பரிந்து தாங்கும் பரங்குன்றிற் பைங்கார் வரவு பார்த்தெதிரே
கூவும் பசிய மஞ்ஞைமிசைக் குழகா வருக வருகவே.
கொழுத்த மதுரம் பழுத்தவருட் குமரா வருக வருகவே. (சு)

திதிக்குங் கடவு ணிறமுகில்சூழ் செழும்பா லுததி நடுத்திசழத்
தேவ ரமுதங் கடையமிறுத் தியமந் தரம்போற் செய்யமலர்
துதிக்கு மடியார் சிவபூசைத் தொழிலுக் குதவுங் கார்நிறத்துச்
சோலை சூழ்வெண் சுதைதீற்றித் துலங்கு மாடஞ் சூழ்நாப்ப
ணுதிக்கும் பரங்குன் றினிலுமன்ப ருள்ளந் தனிலு மொளியாம [க்
லொளிரும் பொருளே வரியளிக ளுழுது மதுவுண் டுறங்கியெழீஇ
குதிக்குங் கடம்ப மலரணியுங் குழகா வருக வருகவே
கொழுத்த மதுரம் பழுத்தவருட் குமரா வருக வருகவே. (எ)

அடுக்கும் பல்லா யிரங்கோடி யண்டப் பரப்பெல் லாம்படைத்தாங்
கசர சரமா கியவனைத்து மணிக ளாக வணிந்தவற்றுண்
மடுக்குங் கிரண மதிபரிதி மௌலி யாகச் சூட்டியெங்கு
மருவி வனப்பு நோக்கியுள மகிழ்பி தாவாய் வதிந்தாலு
மெடுக்குங் கோலந் தனக்கிசைய யாரு நடிப்ப தியல்பன்றோ
விளஞ்சே யாநீ குழையாதி யியன்ற பணிக ளிட்டழகு
கொடுக்கும் பெருஞ்சீர் பரங்கிரியிற் கொடியேங் காண வருகவே
கொழுத்த மதுரம் பழுத்தவருட் குமரா வருக வருகவே. (அ)

---

$ புத்திரகூவம் ஓர் புண்ணிய தீர்த்தம்.

§ பரமன் வடிவாகத் திருப்பரங்கிரி இருக்கிற சரித்திரம்-திருப்பரங்கிரிப் புராணத்துட்காண்க.

ஆறு தாரங் கடந்துதுரி யாதீ தமுந்தீரந் தப்புறமா
மகண்ட வெளியி லத்துவித மாகிப் பரமா னந்தமுழுப்
பேறாய் விளைந்த வருட்பெருக்கே பிறழுஞ் சமயப் பிணக்கறுத்துப்
பிறங்குஞ் சைவப் பெரும்பொருளே பிறவிப் பிணிக்கோர் பெருமரு
மாறாய் வருமும் மலவிருளை வாட்டுஞ் சுடரே யன்பருள [ந்தே
வைப்பா நிதியே மதியாமன் மாவா னவனை வகிர்ந்திரண்டு
கூறாய் விழவே லெடுத்தபரங் குன்றாய் வருக வருகவே
கொழுத்த மதுரம் பழுத்தவருட் குமரா வருக வருகவே. (கூ)

முருகா வருக மூவிருமா முகவா வருக முழுஞான
மூலப் பொருட்கு மூலமென முளைத்த முதலே வருகவரி
மருகா வருக கண்ணேகண் மணியே வருக மறைமுடிவில்
வளரும் பொருளே வருககுற மடமான் மகிழு மழலையிளம்
பருகா வமுதே வருகசுவைப் பாகே வருக பாவலர்தம்
பாடற் கிரங்கி யருள்செயுங்கற் பகமே வருக பழனமெலாங்
குருகார் பரங்குன் றுறைவடிவேற் கோவே வருக வருகவே
கொழுத்த மதுரம் பழுத்தவருட் குமரா வருக வருகவே. (௧0)

வாரானைப் பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் சு-க்கு விருத்தம் (சு0)

---

## ஏழாவது: அம்புலிப்பருவம்.

---

ஒங்கும்ப ரவையுள் ளெழுந்துவர லாலும்வா னூர்தரலி னாலு மென்று, மூலகம்ப ரமரங்க ணெனவந்த விருமாத ரொடுநெயந் துறுதலாலுங்,—தாங்கும்ப விதழ்விரியு மிரவலர்த முகமலர் தரச்செய்த

---

அம்புலிப்பருவம்-சந்திரனை விளையாட அழைக்கும்பருவம்.

லாலுமிகுபூத், தண்டாதுமேனிவந் திடலாலு மையிலிருந் தவளந் தழைத்தலாலும்,—பாங்கும்பர்குழவரு மெம்பிரான் றன்னையொப் பா யென் றறிந்தழைத்தான், பரங்குன் றுருநம் பரங்குன் றுளேயருள் பழுத்திடுந் தேவதருவே,—யாங்கும்ப முனிவனுக் கருள்செயுந் தேசி கனொ டம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொரு ளுட னம்புலீ யாடவாவே. (ச)

(இ-ள்.) ஒங்கும் பரவையுள் எழுந்து வரலாலும்-உயர்ந்த கடலினின் றுந்தோன் றி வருதலினாலும், வான் ஊர்தரலி னாலும்-ஆகாயத்தினிடத்தேயூர்ந்து செல்லுதலினாலும், என்றும் - எக்காலமும், உலகம் - உயர்ந்தோர், பரமர் அம் கண் என-சிவபிரானுடைய அழகிய நேத்திரமென்று சொல்லும் படி,வந்து—,அவிரும்மாதர்ஒடுநயம் துறுதலாலும்-விளங்கா நின்ற அழகுடனே நன்மையானது நெருங்குதலாலும், தாங்கும்-தாங்குகின்ற, பல் இதழ்விரியும்-பலவாகிய இதழ்கள் மலரப்படும், இரவு அலர்தம் முகம் அலர்தரச் செய்தலாலும்-இராத்திரியின்கண் மலர்களாகிய (காவி முதலியவற்றின்) முகங்களை விரியச் செய்தலாலும், மிகு பூ தண்டாது மேல் நிவந்திடலாலும்-அதிகமாகிய பொலிவு நீங்காது மேலு மேலும் உயர்ந்திடலாலும், மை இல் இரு தவளம் தழைத்தலாலும் - குற்றமில்லாத பெருமையுள்ள வெண்ணிறம் விருத்தியாதலினாலும், எனச் சந்திரனுக்கும்.

இனி-ஓங்கு உம்பர் அவையுள் எழுந்துவரலாலும் - உயர்ந்த தேவர்களது சபையினடுவே யெழுந்தருளி வருதலானும், வான் ஊர்தரலினாலும் - (அத்தேவர்கட்குச் சூரபன்மனாலிழந்த) தேவலோகத்தைக் கொடுத்தருளுதலானும்,

என்றும் உலகு அம்பரம் அரம் கண் எனவந்த இருமாதரொடு நயந்து உறுதலாலும் - எக்காலமும் உலகத்தார் கடல் அரம் (இவர்களுக்கு) நேத்திரங்களென்று சொல்லும்படி வந்த (தெய்வயானை வள்ளிநாயகியாகிய) இரண்டு பெண்களுடனே விரும்பிப் பொருந்துதலினாலும், தாங்கும் பல் இதழ் விரியும் இரவலர் தம் முகமலர் தரச் செய்தலாலும்-சுமக்கின்ற பற்களையும் (மேல்கீழ் என்னும்) இதழ்களையுந் திறக்கப்படும் யாசகர்களுடைய முகமலர்ச்சியடையும்படி (வேண்டுவனவற்றைக்) கொடுத்தருளுதலாலும், மிகு பூ தண் தாது மேனி வந்திடலாலும் - (அன்பர்களாலே சாத்தப்படும்) மிகுந்த பூக்களினது குளிர்ந்த மகரந்தங்கள் (திரு) மேனியிலே வந்திருத்தலினாலும், * மையில் இருந்தவளம் தழைத்தலாலும்-மயில் வாகனத்திலெழுந்தருளியிருந்த சிறப்பு வளர்தலினாலும், எனக் குமாரக்கடவுளுக்கும் பொருள்காண்க.

திருத்தங் கலைத்தலைச் சங்கத்தின் மேலெழுதி செவ்வாம் பலங்கொடுக்குஞ், செந்தின கரன்புற மடுத்திடுதி யெங்கணுந் திகழுயிர்ப்பயிர்செழிக்குங்,—கருத்தந்த மேதக வுறக்கோடி யரியகர் கடகத் திடத்திலமர்தி, காமாரி மேலேறி யோடியும் வருதியக் காரணங் கருதிலெல்லாப்,—பொருத்தங்க ளும்பொருந் தப்பரங் குன்றிலுன் போலுட் களித்திருந்தான், பொருவில்பல சமயிகளு மறைமிருதி யாகமபுராணமும் புகலவருசீ,—ரருத்தங்கள் பலவுமொன் ருகிநின் றவனுட னம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (உ)

* மயில் - மையில் போலி.

(இ-ள்.) திருதங்கு அலைதலை சங்கத்தின்மேல் எழுதி-இலக்குமி வாசஞ்செய்யாநின்ற பாற்கடலினிடத்துள்ள சங்கைப்போல (வெண்ணிறங்கொண்டு) மேலெழுந்து வருகின்ருய், செவ் ஆம்பல் அங்கு ஒடுக்கும் செம் தினகரன் புறம் அடுத்திடுதி-சிவந்த ஆம்பற் பூக்களைக் குவியச்செய்யும் சிவந்த சூரியனிடத்தை யடுத்துச்சேர்கின்ருய், எங்கணும் திகழ் உயிர்ப்பயிர்தழைக்க கரு தந்த மேதகவு உற கோடி-எவ்விடத்தும் விளங்காநின்ற உயிருடன்கூடிய பயிர்கள் விளையக் கருவைக்கொடுத்த மேன்மையை மிகக்கொண்டிருப்பாய், அரிய கற்கடகத்து இடத்தில் அமர்தி-அருமையாகிய கற்கடகவீட்டினிடத்துத் தங்குகின்ருய், கா மாரி மேல் ஏறி ஓடியும் வருதி-சோலையினு மேகத்தினு மேலேசென்று தவழ்ந்தும் வருகின்ருய்-எனச் சந்திரனுக்கும்.

இனி - திருத்து அம் கலை தலை சங்கத்தின்மேல் எழுதல் - திருத்தப்படுங் கல்வியையுடைய முதற் சங்கத்தினிடத்து (த்தாமுமொரு புலவராகத்) தோன்றுதலும், செவ் ஆம்பலம் கொடுக்கும் செந்தில் நகர் அன்பு உற மடுத்திடுதல் - செவ்வையாகிய பிரயோசனத்தை (அடியார்களுக்குத்) தருளுந் திருச்செந்தூராகிய தலத்தில் ஆசைமிகக் கலந்திருத்தலும், எங்கணும் திகழ் உயிர் பயிர்தழைக்க கருத்து அந்தமே தகவு உற கோடல்-எவ்விடத்தும் விளங்காநின்ற ஆன்மாக்களாகிய பயிர் வளம்பெறும்படி (திரு) உள்ளம் அழகையே தகுதிபொருந்தக் கொண்டிருத்தல், அரிய கற்கள் தக திடத்தில் அமர்தல்-அருமையாகிய மலைகடோறும்

தகுதியாக உறுதியுடன் றங்கியிருத்தல், காமாரிமேல் ஏறி ஓடியும் வருதல்-மன்மதனைவென்ற சிவபிரான் றிருமேனி மேலேறியோடியும் விளையாடிவருதல் எனக் குமாரக்கடவுளுக்கும் பொருள்கூறுக.

குறிப்பு:—சூரியனிடத்திலே சந்திரன்போய்ச்சேர்வது தினம் ஒருகலை சந்திரனுக்குக் குறைதலிற்காண்க. பயிர்கள் விளைவதற்குச் சந்திரன் கருவைத்தருவது-தொன்று தொட்ட நூல்வழக்கு.

மண்ணி || விர வறவெழுஞ் செங்கேழிளங்கதிர் வயங்குவான் புலவனுகி, மன்னுமிவ னீதலே பெருமையா மென்றெண்ணி மலயமுனியாதிமற்றோர்க்,—கெண்ணில்பல கலைகளும் வழங்கினு னீயுமோ வேற்பதிகழ் வென்றுசற்று, மெண்ணும லொருமித் திரற்குதவு கலையெண் ணிரட்டியும் வாங்குவாயேல்,—விண்ணிலிர வுறவந்து வெளிறியங் கங்குறைய மேயநிற் கென்னமேன்மை, வெண்கயிலை நிகர் பரங் குன்றிலனு தினமுனிவர் விபுதர்முதல் மேலவானே,—ரண்ணிலப யந்தருங் குமரகுரு பரனுட னம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (௫)

பொருவிலரி தாயனு லொருவனிற் கற்றவன் * பொன்மனைவி தாரைதன்னைப், புன்மதி யெனச்சொல்ல நீசெய்த பாதகம் புந்தியினினைந்துபுகல,—வெருவியுள நாணுட் கொளீஇயிருந் தனமதுவும் வெள்ளிடை விலங்கல்போல, மேல்கீழனைத்துந் தெரிந்ததெம் மிறையவன் வேதமுத லாயமெய்ந்நூ,—லுருவியலு மொருபரம குருவென வருந்தனக் கொருகுருவு மில்லையென்ன, வோதா துணர்ந்துகுறை

|| இரவு-இருளுக்கும் யாசத்துக்கும் பொது.

* பொன் அழகு.

யொன்றுமில் லாததனை யுள்ளுவார் குறையகற்றி,—யருவிபொழி தரு பரங் கிரியிலுள ளிதுசமைய மம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (௪)

என்னைமுழு மதியென்ன நாளுக்கு நாள்வளர்ந் திடுவெனென நீ யிசைத்தா, லிஃதொக்கு மெனினுமா காணிமா காணியா வேறுமுறை யிறிலவயதனு,—லுன்னைமுழு மதியென்ப தெங்ஙனமி தன்றியும் மொருவாம லுட்களங்க, முள்ளா யிதைச்சிறிது முள்ளாய்கொ லாதலி னுனக்கிவ னுயர்ந்தவன்காண்,— டென்னையிள மென்கமு கரம்பை பைங் கன்னல்செந் தேனெழுகு தீம்பலாமாச், சேருமடி யாரெனச் சூழும் பரங்கிரிச் செவ்வேள் சிறந்தசெவிலி,—டன்னைநிக ரின்னருள் சுரந்துசே யாயினு னம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட் பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (௫)

¶ மறவாது கொண்டொரு பெரும்பூத மன்றபில வாய்பிளந் துண்ணுமுன்னோர், வரையைப் பிளந்தெடுத் துயர்கலைப் புலவனுயிர் மாயா தளித்ததும்போ,—றுறவாகை யேபுனையு மவுணர்குல வேரோ டொருங்கறுத் தும்பர்கோமாற், குயிரோடு பொன்னுலக முதவியது மன்பினு லொருகவி யுரைப்பவர்க்கும்,—பிறவாத வானந்த நிலைய ருளு வதுமிவன் பேரருட் சத்திவடிவாய்ப், பிறங்குசெங் கைவே லுன க்குவேண் டுவதுநீ பெறுவதற் கையமின்று,—லறவாணர் தொழுது கொண் டாடும் பரங்கிரியி லம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (௬)

கண்டவர்க ளிதுவென்று மதுவென்று நனிபெருங் கலகமிடு கடவுளெல்லாங், காதையினி லன்றியெதிர் கண்டிலே மிக்கொடிய கலியிலோ ராறுமுகமா,—மண்டல மிலங்கவெளி வருதெய்வ மிவனு கு மறைவா யிருப்பனென்று, மதியின்மிக் கோரிரட் டுறமொழித

¶ மறம்-வீரம்.

லான்மதி மயங்காது வருசவிரைவில்,—விண்டல மதிர்சேழுங் சற்பகப் பைங்கிள்ளை மென்பூவை தங்களுக்கோர், வீடென மழைக்கொதுங் கிடுதற் கெழுந்துமிக மேலோங்கு கோபுரச்சி,—ரண்டர்புகழ் தென்பரங் குன்றினில் வரந்தருவ னம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (எ)

முடிபடா நின்றதலை விண்ணவர்கள் கட்குமுன் மூளரியங் கடவுண் முன்னோன், முன்பட்ட பாடுசெற் றுயினு மறிந்திலாய் மூதண்ட முகடுமுட்டும்,—படிபடா நின்றபே ரோதைசெய் தெழுமவுணர் படுகளங் குறுகியப்பாற், பட்டா ரெனுஞ்சொல்புவ னப்பரப் பெங்கணும் பரவியது பார்த்திலாய்கொல்,—கடிபடா நின்றலர் கடம்பணி தடம்புயன் கைவேல்க டாமிவைக்குக், காரணங் காணின் னு முடியிலெவ ராயினுங் கந்தனு மிந்தமைந்த,—னடிபடா ரில்லைநீ தென்பரங் குன்றினி லம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (அ)

|| ஒப்புறுவ ரேனுமொரு வரையொருவர் வந்துகண் ளேமகிழ்தலுலகியற்கை, யுயர்வொப் பிகந்தவ னழைத்தாலும் வந்திலா யுறுசினங் கதுவிலுன்னை,—யிப்புவியில் வரவழைத் திடுவென்முடி யாதென்ன வெண்ணற்க நீயிவன்று, னென்னுமிறை பணியிலொரு பணியெடுத் தேவிலுனை யீர்த்துவந் தெதிர்விடுக்குஞ்,—செப்புவா யப்போதுனக்கென்ன பெருமையிது சிக்கெனத் தேர்ந்துவந்து, சேர்ந்திடிற் றிருவருட் கிடனுதி யாடவர் திருத்திமட வார்கண்முலைமே,—லப்புகள பங்கமழ் பரங்கிரிக் குமரனுட னம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்பழம் பொருளுட ன்ம்புலீ யாடவாவே. (கூ)

ஒருவனென் பாரதன் பொருள்வேறு கூர்ந்துணர்தி யுறுதுணைவரோரிலக்கத், தொன்பதின்ம ருளரவரு ளொருவரண் டங்களை யுடை

---

|| ஒருவன் - என்பதற்கு வேறு பொருள் ஆட்வொகனத்தை யுடையவனென்பது.

த்துடைத் தோடிமீள,—வருவரிவை முழுவது முணர்ந்தேனும் வருக
வினி வாரா திருத்தியேனின், மாகாய மேற்றந்தை கைம்மா னெடு
த்துமுழு மாசுசெய வரவிடுப்பன்,—கருவபங் கப்படுமு னிதுகாறும்
வாராக் கடும்பிழைகள் கமியென்றிவன், காலினி விடும்பணிகள் கை
யிற் செயக்கடவை கண்டது விளம்பினேம்யா,—மருவரா தன்பர்பர
வும்பரங் கிரியில்வந் தம்புலீ யாடவாவே, யருட்பிழம் பாகிய தெருட்
பிழம் பொருளுட னம்புலீ யாடவாவே. (௬0)

அம்புலிப்பருவம் முற்றிற்று.
ஆகப்பருவம் எ-க்கு விருத்தம் (எ0)

## எட்டாவது: சிற்றிற்பருவம்.

கூடுங் தவள மணிமுத்தங் கொழித்திங் கெடுத்துட் குறித்துநீள்
கோட்டை யிட்டு மழப்பருவங் கோடற் கேற்பக் குழுமிவிளை
யாடும் பரிசு பார்த்தெம்மோ டளவ ளாவு மப்பருவ
மமைந்து மதற்கொல் லாயிடையூ ரூற்ற லழகோ வருளாளா
ஆடுஞ் சினங்கோங் கிளமுலையா ருதைந்துந் தணியா துறமகிழ்ந
ருளநெக் குருகி யுதவிர்க்கு முபாயம் யாதென் றுண்ணினைந்து
தேடுஞ் செழிய னுட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்றாய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ()

நிறம்பார்த் தெடுத்துப் பன்மலரு நிரவ விரவி நின்னடியார்
நினக்குத் தொடுத்த மாலையென நீல முதற்பன் னிறமணிகள்
புறம்பார்த் தவர்கண் வழுக்குறச்செய் புரிசை யரங்கு புறந்திண்ணை
புதுக்கு மருமை பார்த்திலையுட் பொருமை யில்லார் போற்புகழ்சா
லறம்பார்த் தேனுஞ் சினந்தணிதி யருமைக் குமரா மண்பெண்பொன்

---

சிற்றிற்பருவம். மகளிர் கட்டி விளையாடுஞ் சிறுவீட்டை யழிக்குஞ் சிறுகுறும்புசெய்து விளையாடும் பருவம்.

ஞசை யாலும் பிறவாலு மடுச்கு நீதி யாருமென் றந்
திறம்பாச் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

எனைச் சிறுவ ரெனவிவனை யெண்ண லீரென் றிசைப்பதுபோ
லிருகாற் சதங்கை யொலிப்பமறு கிடைநீ விளையாட் டெய்திவர
மேனைக் கிருகண் மணியாந்தாய் விடுத்தா ளென்னத் தெரிந்துமெதிர்
மேவி யழையே மியாமெனிலுன் மீதோர் குறையென் விள்ளுவது
சோனைப் புயனீ ரருந்துகடல் சூழுந் திசைக டொறும்விசையந்
தொடங்கி யெழுந்து நந்திகணத் தொல்லோர் வலியுந் தொலைத்துவரு
சேனைச் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௩)

அழிக்குந் தொழிலுன் றந்தைதனக் காகு நினக்கே தவஞெடுநீ
யபேத மதஞற் செய்யநினைந் தாயோ வெமைப்போ லமையாமற்
பழிக்கும் பிறர்சொல் வசைக்கென்ன பகர்வேந்தகட்டுப்பகட்டுவரால்
பாய்ந்து பூக மிடமுறடித்தப் பாற்போய்ப் பலாமாப் பழங்களையுட்
கிழிக்குந் தடையாற் கற்பகப்பூங் கிளைமட் டொடுங்கிக் கீழ்வருநீர்க்
கேணி மலர்த்தேன் பாய்பழனங் களருஞ்சாலி செழிஇயவளஞ்
செழிக்குஞ் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௪)

இருவார் கிழிக்குங் களபமுலை யேந்தி யிதண்மே லெழுங்குறமா
னியல்கான் பரல்க ளுறுத்துதழும் பேறி யிருப்ப தோடென்று
மருவார் கலசம் பொருமையினல் வணங்கு மண்ட வாணர்முடி
மகுட மணிக ளழுத்தலிஞே வாதென் றுலு மலரடியாற் [ப்
பொருவார் திரைப்பூம் பொருநையிரு புறத்து மடியார் புரிந்திடுமெய்
பூசை மடமுஞ் சிவாலயமும் பொலிய மலியும் புண்ணியத்தின்
றிருவார் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ()

இருக்குங் கணிப்பூர் தருநிழற்கீ ழெழிற்பொற் சுண்ணங் கொடிச்சியர்க, ளிடிக்குங் கரிக்கொம் புலக்கைபோ யிசைய விறுகிச் செருகிநின்றங்,—குருக்கும் வெள்ளிக் காம்பாக வுயர்பொற் குடையொத் தொளிருமிரு, லொழுக்குஞ் செந்தே னுடையென வுறவும்பெருகி யோடியயன்,—மருச்குந் தளவாய்ச் சியர்முல்லை வனஞ்சூழ் பாய வளர் சாமை, வரகு விளைவுற் றுதவுகதிர் வானூர் புரவி மாந்தியுளஞ்;—செருக்குஞ் செழிய னாட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தெய்வச் சைவப் பரங்குன்றாய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (சு)

நெய்யுந் தயிரும் பாலுநவ நீத மோடு நிதந்திருடி
நெடுமா லுண்டா னூதியமென் னிகழ்ந்த தென்று நிரைவளைகைப்
பெய்யுங் கவிஞ ராயமின்னார் பிறங்கு மிந்தப் பெயர்க்கேற்பப்
பேணி யவையா வையுஞ்சுமர்து பெரிய விலாபம் பெறக்கோடுபோ
யுய்யுந் தமதூர் குறிஞ்சிமுல்லை யோங்கு மருதத் தூடருவோ
டுருவா மூர்த்தி களையாட்டி யூட்ட நல்கி யுயர்தருமஞ்
செய்யுஞ் செழிய னாட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்றாய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எ)

ஓங்கு பொழின்மேன் மேல்வளர வோரா ழித்தே ரூர்புரவி
யுடைப்ப வொழுகு பலாக்கனித்தே னுண்டு வண்டு பெடையுடனே
தாங்கு கமலா சனத்திருந்து தனிபா டிசைகே தகைமலரிற்
றங்குங் குருகு நெடுங்காயாத் தருதன் னிழலைத் தன்னடியுள்
வாங்கு மமையத் தாங்கெழுந்து வருங்கான் வாழ்க்கை வாரணமு
மகிழ்ந்து கேட்ப விடைநிலைத்தி வகம்போற் செல்லு மருதவளந்
தேங்கு செழிய னாட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்றாய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ()

கூறு மடற்கே தகைமலரிற் குளிர்வெண் டாது கொண்டலள்ளிக், கொண்டு பூட்டு விற்பொருள்போற் குறிஞ்சி போய்க்கார்க் குஞ்

சரத்தை,—யேறும் வெண்குஞ் சரமெனமெய் யெங்கும் பொதிய விது வானே, ரிறைவன் களிறென் றெண்ணியின்னு மிரண்டு கொம்புக் கெந்தவிடை,—யூறு வந்த தெனவிரங்கு வோர்முன் சணிப்பூ வொழுக்கியதே, னுடலங் கழுவப் பண்டையுரு வுறமப் போதங் குண்மைகண்டு,—தேறுஞ் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௬)

ஓரூர் தலம்பே ரொருவுமன்ப ருளக்கோ யிலினு மோராரு
றுச்சி மீது மறைமுடியு முலகம் படைத்தோ னெளிர்தலையுங்
காரூர் மிடற்றெம் மிறைமார்புங் கௌரி மடியாங் கவின்றவிசுங்
ககன வாழ்க்கை யமரரிறை கதிர்மா முடியுங் களபமுலை
வாரூர் தெய்வ யானைவள்ளி மலர்ப்பொற் கரமும் பூதியினன்
மாசு படுமே யாதலினுன் மறைநூ புரப்பொன் மலரடியாற்
றேரூர் செழிய ஞட்டரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வச் சைவப் பரங்குன்ருய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே. ()

சிற்றிற்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் அ௦ விருத்தம் அ௦.



## ஒன்பதாவது: சிறுபறைப்பருவம்.

அரும்புமலர் காய்கனி யகத்தடக் கிப்பருவ மாங்கெய்து போதிலொவ்வொன், ருகவெளி யிட்டுயர்ந் தோங்கியொரு நிலைநிற்கு மரிய கற் பகநிகர்ப்ப,—விரும்புசத் தியகிரி சுமந்தவன மொடுபிரம விட்டுனுத் தருவமேன்மை, மிக்ககும ராபுரி யெனுந்திருப் பெயர்களை விடாதுள் ளமைத்துமேன்மேல்,—வரும்புதிய யுகமீ ரிரண்டிற்கு முறையே வழங்குமான் மியமிகுந்த, மாதலமி தென்றுவந் தஞ்சலித்

சிறுபறைப்பருவம். சிறியதோற்கருவி தட்டிவிளையாடும் பருவம்.

தெதிர்நிற்கு மன்பதையும் வானுளோருந்,—திரும்புதல் செயாவருள் புரிந்திடுங் கந்தவேள் சிறுபறை முழக்கியருளே, திருப்பரங் கிரியினில் விருப்புறுங் குருபரன் சிறுபறை முழக்கியருளே. (௧)

மண்டிபெதிர் பொருதகுவர் மாளத் தொலைத்தமரர் வாழ்வுதவு தற்குமின்னை, வரவிட்ட வார்சடைத் தம்பிரான் கண்ணழல்கண் மன்னுமொரு வடிவமாகித்,—தொண்டிசையு முதவிபல நிற்சுமந் தாற்றத் துணிந்துவரு தோற்றமொப்பத், தூயநா ரதமுனி மகத்தெழுந் தண்டச் சுவர்த்தலங் கிடுகிடென்ன,—வெண்டிசையும் வெடிபட்டு நடுநடுங் கக்கிரிக ளெட்டுமெட் டுக்கரிகளோ, டின்றுந் திடுக்கிட் டொளிப்பவெழு கடல்புரண் டிடவொரு முழக்கமிடுசேர்த்,— திண்டிறன் மிகுஞ்செய்ய தகரேறு சேவகன் சிறுபறை முழக்கியருளே, திருப்பரங் கிரியினில் விருப்புறுங் குருபரன் சிறுபறை முழக்கியருளே. ()

வேதங்க ளாகம புராணவிதி காசங்கண் மிருதிகண் முழங்கமுனிவர், வேதியர் மகத்தழன் முழங்கநா லஞ்ஞூறு வெள்ளந் திரண்டெழுந்த,—பூதங்க ளெம்பெரும் பூதவலி பெற்றேழு புணரியினு மிகமுழங்கப், போந்துகிர வுஞ்சமெனும் வஞ்சமலை யங்கைவேல் போக்கிப் பிளந்ததற்குண்,—மாதங்க நிசர்வீர வாகுமுத லியதுணை வரைக்கண்டு சிப்பியொன்றை, வகிர்ந்துவிலை மதியா வரம்பெற்ற பன்மணி மகிழ்ந்தெடுப் பவரைமானச்,—சேதங்கள் வாரா தெடுத்தருள் செயுங்கடவுள் சிறுபறை முழக்கியருளே, திருப்பரங் கிரியினில் விருப்புறுங் குருபரன் சிறுபறை முழக்கியருளே. (௩)

அடிக்கடி பெருங்கலக மிடுமசுரர் மேற்சின மடங்காது மேருவும்போ, ராற்றவரல் போல்வருஞ் செம்பொனுற் றிருவுரு வமைந்ததே ரதனின்மேரு,— ¶ முடிக்கடி மிதித்தேறு மணிமிடற் றெந்தை போன் முந்துற விவர்ந்துவெற்றி, முரசுகண் முழக்கிமும் மலவிருள்

¶ முடிக்கு - உருபுமயக்கம்.

பிளக்கின்ற முழுஞான மொப்பவொருகைக்,—நொடிக்கடி சையிற் சென்று கயமுகத் தாருகனை நூறியிரு கூறுசெய்து, நதிவே லெடுத் தனைய தாருகன் மனைவியரை நுங்கழன் முழங்கநோன்மைச்,—செ டிக்கடிகொண் மெய்யவுணர் குலவே ரறுப்பவன் சிறுபறை முழக்கி யருளே திருப்பரங் கிரியினில் விருப்புறுங் குருபரன் சிறுபறை முழக் கியருளே. (௪)

தாருகா சுரனுரங் கிண்டுசெங் குருதித் தடங்கட லியற்றிமேலுர், தகுவர்குழு முழுவது மறச்செயுங் கோபவெந் தழல்பொதிந் தனைய செய்ய,—போருகா தொளிறுகூர் வேலினுற் சரவணப் பொய்கை யுண் டாக்கியதனுட், புனல்படிந் தாவோர் தருமமே யாதிநாற் பொரு ள்பெறத் தந்தபொன்மா,—மேருகார் முகமெனக் கொண்டவிறை யினிலுமிவன் மேலென விளங்குமாறு, மென்முக மலர்ந்தஞ்ச லீரெ ன்று முப்போது மேவுபு விடாதுதன்னைச்,—சேருகா வலனுதி யர்க் கபய மீவள்ளல் சிறுபறை முழக்கியருளே, திருப்பரங் கிரியினில் விரு ப்புறுங் குருபரன் சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு.

பீடுறு திருமால் பெற்றிடு மருமைப் பேதை யொருத்தியைநீ
பெருவா னிறைமக ளாகென் றேவிப் பின்னு மொருத்திதனை
வேடுவர் பாலொரு சிவமுனி மகளாய் மேவென் றுய்த்தவினை
விளைவா லவண்முலை யளைமா மயலுற வெங்கா னிற்றேடி
வாடுதலெய்தி யிதண்கீழ் நின்றரு மறைசண் முழச்குதல்போல்
வந்தனை செய்தெனை மருவுக வென்றித வசனம் பற்பலவாய்
மூடுத லின்றி முழக்கிய முருகன் முழக்குக சிறுபறையே
மூவிரு தலையன் மாபர மலையன் முழக்குக சிறுபறையே. (௬)

அதிர்வன் பரவை வரும்பரி சேனவரு மசுரத் தலைவரையங்
கடுபுய வரையீ ராறினு மலர்குா வலரிற் றேனுண்டு

பிதிர்பொன் பயின்மென் பொறிவிரி சிறையளி பெடையைத் தொழுதி
பேசுபு துனிதவிர் போது புணர்ந்திடல் பிரிவுற் றோடாமே [ன்சொற்
கதிர்தன் றியகிண் கிணிகண் முழங்கிய கமலச் சீறடியாய்
கதிதந் தருளும துரையம் பதியமர் கழகத் தினிலேறி
முதிர்செந் தமிழை முழக்கிய முருகன் முழக்குக சிறுபறையே
மூவிரு தலையன் மாபர மலையன் முழக்குக சிறுபறையே. (எ)

அந்தியி னம்பிறை தங்கிய செஞ்சடை யத்தனை நிதமருவி
யன்பினி றைஞ்சிய கந்தெளி யுந்தவ மற்றவ ரெனவெருவி
யிந்திரன் வெந்துய ரம்பட வென்றிடு மெத்தனை யசுரர்களு
மெஞ்சுபெ ருஞ்செரு வொன்றுசெ யும்படி யித்தல மதிலுவேஞ்
சந்திர னுந்தவ ழும்பொதி யம்பயில் சத்திய முனியருள்செய்
தண்டமி ழென்றும ளேந்தெழு தென்றலி னத்தொடு பரவுமெழின்
முந்திய செந்திலின் வந்துறை யும்பன்மு ழக்குக சிறுபறையே
மூவிரு தலையன மாபர மலையன்மு ழக்குக சிறுபறையே. (அ)

வேறு

குலமறை யிற்கிளர் மணிமகு டத்தினை நிகரெனவே
குளிர்கிரி யுச்சிக டொறுமுறை யற்புத முழுமணியே
கலகமி டற்கெழு மவுணவி ருட்கிடர் புரிசுடரே
கடவுண்ம டப்பிடி மருவிய வணைத்திடு மழகளிறே
யலகிலு யிர்த்தொகை முழுதும ளித்தருள் செயமுதலே
யரைநொடி யிற்புவி பலமுறை சுற்றிடு மயிலிறையே
பலசம யத்தொரு கடவுண்மு ழக்குக சிறுபறையே
பரமலை யிற்பொலி முருகன்மு ழக்குக சிறுபறையே. (௯)

மடம யிலைப்பொரு குறமக ளுக்கெதிர் பயமுறவே
வளரும ருப்பொடு பதமுமி ரட்டுற வெழுகவுளார்
கடகளி றுக்கிளை யவனென வுற்றருளிர் தருகுமரா
கயிலைம லைக்கிறை விழியிலு தித்தருள் சிறுமதலாய்

தடமுலை மத்தக மொடுபொரு பொற்பினர் மகிழ்குழகா
  தமிழைவ ளர்த்துத வியபுல வர்க்கொரு குருபரனே
படஙட னத்தவன் மருகமு ழக்குக சிறுபறையே
  பரமலை யிற்பொலி முருகமு ழக்குக சிறுபறையே. (கo)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் கூ-க்கு விருத்தம் (கூo)

---

## பத்தாவது: சிறுதேர்ப்பருவம்.

உட்பகை புறப்பகை யினும்பெரிய தென்றுமுன் னோருரைக் கின்றவுரைபொய், யோசிக்கி லென்னவெந் தாருகன் முதலோரி னுள முருகி யுறுகண்மிக்கு—விட்பயிலும் வாழ்வரசி னேடிழந் துருமாறி மேருமலை மேவியங்கண், மெலிவாய் மறைந்திருக் கின்றவிந் திரனுதி மேலைவா னுடர்வெளிவந்—தெட்பகவு நேர்பகையு மில்லா துளங்க ளித் திரவிகதிர் செல்லுமிடமெங், கெங்குமவ ரவர்மணிப் பொற்றே ருருட்டுதற் கெண்டிசையி னெல்லைமுழுதந்—திட்பமிகு தெய்வத் திருத்தே ருருட்டுநீ சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (க)

மென்முுல் பொதிந்தசெந் தசையுடம் பென்னிலுண் மேவிப் பிளக்குமற்றை, வீரர்வேல் போலாது வயிரக் கருங்குன்றும் விள்ளப் பிளக்கும்வேலை—யஸ்ஞர் தரஞ்சுவற நம்மேல் விடுத்தல்போ லாண் டலைத் துவசனின்னு, மந்தோ விடுக்கிலதை யாற்றுவார் யார்கொ லென் றஞ்சியவ னச்சுமந்து—நின்றேு மெனிற்பயமி லென்றே கரு ங்கட னினைந்தோ ருருத்திரண்டு, நேர்வந்து நிற்றல்போ னிற்கும்

---

சிறுதேர்ப்பருவம் - பருவத்துக்கேற்ற கைத்தேருருட்டி விளையா டும் பருவம்.

பசுந்தோகை நீண்முது கிவர்ந்துசித்தஞ்—சென்றேகை யுடனன்பர் தெரிசிக்க வருபவன் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (உ)

ஆயிரத் தெட்டண்ட மரசுநூற் றெட்டியுக மாண்டுநினை யவமதி த்தோ, ஞகமிரு பாகமா கப்பிளந் தெறியுநின் னங்கைவே லற்பவாழ் நாட்—பாயிரத் தந்தமிய லறியாத பிறரையென் பாடுகள் படுத்துமோ யாம், பார்த்திலோங் கேட்டிலோ மென்றென்று போர்க்களம் பயில் பொருநர் பாடவசுரர்—வாயிரத் தங்கக்க மூளைகுட ரென்புதோல் வளர்நரம் பாதிசரிய, மண்டுசிறு குண்டகட் டுக்கரும் பேயுண்டு மகிழ் பறந் தலைவழுக்குஞ்—சேயிரத் தம்படிந் தெழுதே ருருட்டுநீ சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறு தே ருருட்டியருளே. (ங)

கக்குசெங் குருதிகட லாகவவு ணப்பிணக் காடுபோர்க் களமெ லாஞ்சூழ், கரையாக வம்பொன்னி னூற்செயுங் காம்பற்ற கைக்குடை கள் கதிர்விடுஞ்செம்—மொச்குளா வெள்ளென்பு முறிசள்கயன் முத லான மூரிமீ னுமுழுத்தேர், முற்றுமுடை பட்டதட் டெங்குநா வா யென்ன மொய்ப்பமீ காமனுக—வெக்குகுடர் வீங்கிணை முண்டுகூ ளிகளதி லிவர்ந்துவிளை யாட்டியற்ற, வெஃகமொடு பதினொரா யுதமு மொவ் வோர்சையி லெடுத்திரும் போர்செய்தெட்டுத்—திக்குமுழு விசையஞ்செய் மயிலேறு சேவகன் சிறுதே ருருட்டியருளே, திரு வளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே.()

மன்றல்கம ழுங்குழற் காடுகொண் டெழுகுறவர் மடமா னிலங்கு மார்பில், வைத்துச் சுமக்கும்பொன் மலையிரண் டொடுதெய்வ மாத ங்க மார்பிலேந்தி,—நின்றகன கக்குவ டிரண்டினும் பழகலா னீடுபல வரைகளெல்லா, நெறுநெறென் றேமுறி தரப்பொரு புயாசல நெரு ங்குமீ ராறின்மேலு,—மன்றலர் கடம்பமலர் மாலையொரு காலத்தி லணிவதொரு காலத்தினுக், காகாத தாமிதெக் காலத்தி னும்புனைய

லாகுமென் றன்பர்சாத்தும்,—தென் றமிழ்ப் பாமாலை யேவியந் தணிப வன் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தரு ங்குகன் சிறுதே ருருட்டியருளே. (ரு)

குட்டைக் கருங்கூளி கொட்டுக் கிசைந்துசெங் குஞ்சிக் கொழு ந்தழற்கட், குருதியொழு கவுணர்தலை குறையுடற் கட்டைகை கோத் தித் துணங்கையாட,—நெட்டைப் பருங்கருங் கையெடுத் தறுதலைக ணிரைசெருகி யக்கைமுன் னர், நீள்விரன் முறித்துநேர் நிற்கப் பதித் ததி னெடுந்திர ணரம்புசுற்றுங்,—கட்டைத் திறம்பா திறக்கிநின் றுயர்பூத கணநாதர் கைகள்வருடிக், களம்பாடி விளையாடி மகிழும் பெரும்பிணக் காட்டொடு கலன்கிடந்த,—திட்டைக் கடந்தேறு தே ருருட் டுஞ்செல்வ சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளரு ள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (சா)

ஆவலங் கொடியா மனத்தகுவ ரண்டங்க ளாயிரத் தெட்டுமெ ன்றி, யப்பாலிருந்திடற் கண்கோட் டற்குவிழி யாயிர மலர்த்தல்போ னீ,—மீவலங் கோடியான முற்றேறு போதுவெளி விரிபசுந் தோகை மிளிரு, மென்மயிலின் மீதுமர கதவெற்பின் மாணிக்க வெற்பிருந் தென்னமேவிக்,—சேவலங் கொடியசெய லென்றுகரு தாதுமிகு கே டுகு ழந்தவசுரர், கிளையெனுங் களையற வெறிந்துதெய் வப்பயிர் கிளை க்கச்செய் கிருபையுற்ற,—சேவலங் கொடியங்கை யுள்வைத் தெழுங் கடவுள் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (எ)

தக்கனர் வேள்விக் கிசைந்தபழி மிகுதலாற் றம்பதி தவிர்ந்து திரியத், தாமோ தரன்பிரம னிந்திரன் முதற்றேவர் தாந்தா மடைந்த துன்பம்,—புக்கதிவன் வழியாக வென்றெண்ணி யோபிழை பொறு த்துநீ போதநல்கப், போர்க்களத் திற்சூர பன்மனொரு சேவலும் பொ ருவிலொரு மயிலுமாகி,—மிக்கவறி யாமையோ டெம்முடல் பிளந்தி ட்ட வேற்கிறைவ காக்கவென்று, வேண்டவொன் றைக்கொடி யெ

ணக்கைவைத் தொன்றூர் விமானமா மீதிவர்ந்து,—செக்கருரு வாமி ளங் கதிரென விருந்தவன் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங் கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (அ)

கலைமுழு துணர்ந்துசுவை முதிருந் தமிழ்ப்புலமை கனியுநீ யாத விற்சங், கத்தமர்ந் தன்றந்தை கவியினிற் குற்றநனி கற்பித்த கலை வலானை,—மலைமுழையி லொருகுற ளடைந்திடும் போதுமன மகி ழாது பசியதோகை, மயிலேறி யவனெதி ரெழுந்துசிறை மீட்டருள் வரம்பல வழங்குநின்சீர்,—நிலைமுழு தறிந்துநின் வழிப்படுத் தற்பொ ரு ணிரம்புதுதி யாகவவன்வாய், நிகழ்த்துபிர பந்தம் படித்தவர் நினை த்தவை நீடுபெறு வரமுநல்குஞ்,—சிலைமுழு வெனுந்திரட் பன்னிரு புயாசலன் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங்குகன் சிறுதே ருருட்டியருளே. (கூ)

வில்வச் சிறப்புற்ற மாலிகைத் தம்பிரான் வெகுளிக் கிலக்க டீனோர், வியா ரியாரென்று நினையாது விண்ணவரை வேதனைக் குட் டடுத்துந்,—தொல்வச் சிரத்தேக முற்றொருவ ராலுந் தொலைக்கருந் தோற்றமெய்துஞ், சூர்ப்பகை தடிந்தனை யூர்தியுந் துவசமுஞ் சொல் லவெதிர் தோன்றிநின்று,—நல்வச் சிரப்படைப் புருகூத னுக்குவிண் ணுடரசும் வாழ்வுகல்கி,நாடோறு மன்பதைக ளீடேறு மன்பதை நய ந்துளம் வியந்தருட்செஞ்,—செல்வச் சிறப்புடன் பல்லூழி வாழ்ப வன் சிறுதே ருருட்டியருளே, திருவளர் பரங்கிரியு ளருள்பொழி தருங் குகன் சிறுதே ருருட்டியருளே. (௧0)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ௧0 - க்கு விருத்தம் (௧௦0)

காப்புச்செய்யுள் ௧ - ஆக விருத்தம் (௧0௧)

திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

## ஆண்பாற்பிள்ளைக்கவியினிலக்கணம்.

இரண்டாமாதத்திற் காப்புக் கூறுதலும், ஐந்தாமாதத்திற் செங்கீரை கூறுதலும், ஆறுமாதத்திற் சொல்லுவதைப் பழகுதலும், எட்டாமாதத்தில் தாலாட்டுதலும், ஒன்பதாமாதத்திற் சப்பாணிகொட்டலும், பதினொராமாதத்தில் முத்தங் கூறுதலும், பன்னிரண்டா மாதத்தில் வாரானைகூறுதலும், பதினெட்டா மாதத்திற் சந்திரனை யழைத்தலும், இரண்டாமாண்டிற் சிறுபறை கொட்டலும், மூன்றுமாண்டிற் சிற்றில் சிதைத்தலும், நாலாமாண்டிற் சிறுதே ருருட்டலுமாம். இவ்வாறு பிங்கலந்தையிற் கூறப்பட்டது.

## பிழைதிருத்தம்.

### திருப்பரங்கிரிப் புராணவசனம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உக | உரு | ன்னை | ம்மை |
| சசு | உகூ | மாமதானபுராம் | மாதானபுரமாம் |
| ருரு | ௧0 | மெடுத்துக் | மெடுத்து |
| ௯ | உச | களிளெ | களிலெ |

### திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ச | க | பிள்ணை | பிள்ளை |
| ௧0 | உரு | அ | கூ |
| கக | கூ | கூ | ௧0 |
| உ0 | ரு | புதல்வர் | புதல்வா |

